உ

ஓம்

பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.



தொகுதி 6 } துன்மதி௵ வைகாசி௴ கஉ { பகுதி 11
1921௵ மே௴ 14உ

## கடவுள் வணக்கம்.

ஞானமே வடிவாய்த் தேடுவார் தேடு
நாட்டமே நாட்டத்து ணிறைந்த
வானமே யெனக்கு வந்துவந் தோங்கு
மார்க்கமே மருளர்தா மறியா
மோனமே முதலே முத்திநல் வித்தே
முடிவிலா வின்பமே செய்யும்
தானமே தவமே நின்னைநா னினைந்தேன்
தமியனேன் றனைமறப் பதற்கே.

மறமலி யுலக வாழ்க்கையே வேண்டும்
வந்துநின் னடியர்தம் பணியாம்
அறமது கிடைக்கி னன்றியா னந்த
வற்புத நிட்டையி னிமித்தம்
துறவது வேண்டு மௌனியா யெனக்குத
தூயநல் லருடரி னின்னம்
பிறவியும் வேண்டும் யாமென திறக்கப்
பெற்றவர் பெற்றிடும் பேறே.

புத்திநெறி யாகவுனைப் போற்றிப் பலகாலும்
முத்திநெறி வேண்டாத மூடனே னுகெடுவேன்
சித்திநெறிக் கென்கடவேன் சீரடியார்க் கேவல்செயும்
பத்திநெறிக் கேனுமுகம் பார்நீ பராபரமே.

கண்டறியேன் கேட்டறியேன் காட்டுநினை யேயிதயங்
கொண்டறியேன் முத்தி குறிக்குந் தராமுண்டோ [ல்லாம்
தொண்டறியாப் பேதைமையேன் சொல்லேநின் றொன்மையெ
பண்டறிவாய் நீயே பகராய் பராபரமே.

# ஆனந்தபோதினி

துன்மதி ௵ வைகாசி ௴ ௧௨

## மாணவர்களுக்கு எச்சரிக்கை.

நமது அன்பார்ந்த மாணவ சகோதரர்களே! சமயோசிதம் போல் இச்சமயத்தில் உங்களுக்கு ஒரு விஷயத்தைப்பற்றி எச்சரிக்கைசெய்ய விரும்புகிறோம். ஆனால் இப்போது நாம் உங்களுக்கு நீதிகளையேனும், புத்திமதிகளை யேனும் கூறக் கருதவில்லை. மனம் போனபடி யன்னிய ஆசாரங்களைப் பின்பற்ற வேண்டாம் என்று புகலவில்லை. காற்சட்டை பூட்ஸ் மாட்டிக்கொண்டு நின்றபடி மேஜைமேல் உள்ள ஆகாரத்தை யருந்த வேண்டாமென் றுரைய வில்லை. அரைக்கால் மீசை கால்மீசை வைத்துக்கொண்டு அழகு பார்க்க வேண்டாமென்று புத்திகூறவில்லை. பாடசாலைக்குச் செல்லும்போது புத்தகங்களை வாய்திறக்கவொட்டாது கக்கத்தில் இடுக்கிக்கொண்டு நாகரீகமெனமதித்து ரூலர் ஸிகரெட், ஸிஸர்ஸ் ஸிகரெட், அக்பர்பாதுஷா ஸிகரட்டுகளோடு சம்பாஷித்துக் கொண்டு போகவேண்டாமெனப் புத்தி புகட்டவில்லை.

ஆனால், நண்பர்களே! நாம் இப்போது உங்களுக்கு எச்சரிக்கை செய்யக் கருதிய விஷயம் உங்களுடையவும், உங்கள் சந்ததியாருடையவும், இகலோக பரலோக நன்மைக்கும், நம் தாய் நாட்டின் முன்னேற்றத்திற்கும் அத்தியா வசியமானவிஷயம். இதைப்பற்றி இனியும் கவனியாது பராமுகமாக விருந்தால் நமது தாய்நாடு இன்னும் க்ஷீணத்தையடையும் என்பதில் சற்றும் ஐயமில்லை. அது மட்டுமல்ல, கொஞ்சக்காலத்திற்குள் ஹிந்துக்கள் என்ற பெயரும் மதமும் நாம் ஒரு ஜாதியாரென்பதும் அடியோடு மறைந்துபோம்.

ஆகையால் மாணவ நண்பர்களே! இந்த எச்சரிக்கையை அலட்சியம் செய்யாமல் கவனத்தில்வைத்து நடக்கும்படி உங்களை மிகவும் வேண்டிக் கொள்கிறோம். இப்போது இராஜபாஷையாகிய ஆங்கிலபாஷையைக் கற்கிறீர்கள். ஆனால் அதை யெதற்காக, என்னநோக்கங் கொண்டு கற்கிறோம் என்று உங்கள் மனச்சாக்ஷியையே கேளுங்கள். "ஜீவனம் செய்வதற்காக" என்றே விடை

வரும்—ஆம். நீங்கள் எவ்வளவு வாசித்தாலும் ஆங்கிலக்கல்வி யுங்களுக்கு வயிற்றுப் படிப்பாகமட்டும் உதவுமே யன்றி வேறில்லை யென்பது உண்மை.

நாம் அரிய இம்மானிடப்பிறவி யெடுத்தது, வயிறுவளர்ப்பதாகிய இந்த ஒரு காரியத்திற்காகத்தானு? அந்தோ! உலகில் மிருக பக்ஷியாதி ஜீவன்களு மன்றோ அத்தொழிலைச் செய்கின்றன? நாமும் அதைமட்டுமே செய்வதானுல், மிருகங்களினும் நாம் எதனுல் உயர்வான ஜன்மமாவோம்? மானிடராகப் பிறந்த நாம் நாமார், இவ்வுலகம் என்ன, இதில் நமக்கென்ன சம்பந்தம், நமக்கும் இத்தேகத்திற்கும் உள்ள சம்பந்தம் எத்தகையது, இவற்றில் எது நித்தியம் எது அநித்தியம் என்ற உண்மையையறிந்து நித்தியமான வஸ்துவை யடையு மார்க்கத்தை யுணர்ந்து, ஆன்மார்த்தத்தைப் பெற்றுய்ய வேண்டாமோ?

இத்தகைய ஆன்மார்த்தத்தை யளிப்பது நமது தாய்ப்பாஷையேயன்றி வேறெந்தப் பாஷையுமில்லை யென்பது சத்தியமன்றோ? மாணவ சகோதரர்களே! இப்போது நீங்கள் உங்கள் தாய்ப்பாஷைக் கல்வியை யெவ்வளவாக மதிக்கிறீர்கள் என்பதைச் சற்று சிந்தித்துப்பாருங்கள். சிந்தித்துப்பாருங்கள் என்று நாம் கூறுவதைப் பேசாமல் வாசித்துவிட்டு வைத்து விடுவதால் பயனில்லை. இந்த விஞடியே இதன் பின்வரியை வாசிப்பதை நிறுத்திவிட்டுச் சிந்தித்துப்பாருங்கள். அப்போது “தாய்ப்பாஷையை நாம் மதிப்பதேயில்லை; அதன் அருமை பெருமைகள் நமக்கு விளங்கவில்லை” என்று உங்கள் மனதில் நன்ருய்ப் புலப்படும். “இவ்வாறிருப்பதால் நாம் வேண்டுமாயின் அன்னியபாஷையில் நிபுணராகலாமேயன்றி, நமது தாய்ப்பாஷையிலுள்ள நமது மதநூல்களை நாம் வாசித்துணரப் போகிறதில்லை. நமது மதக்கொள்கைகளும் சித்தாந்தங்களும் இன்னவையென்று நாம் அறியப்போகிறதில்லை” என்பதும் உங்களுக்கு இப்போதே புலப்படலாகும்.

அந்தோ! கேவலம் வயிறுவளர்க்க மட்டும் கல்விகற்று அதனுல் பொருள் சம்பாதித்து உண்டுடுத்துக் காலங்கழித்து, முடிவில் நம்மது நமதென்று மயங்கியிருந்த யாவற்றையும்விட்டுத் தென்புலத்தானுக் கிரையாவதா ஹிந்துக்களாகிய நமக்குரிய செய்கை? கேவலம் கல்வியறிவில்லா மூடன்கூட “சே! இதென்ன நிலையில்லாத பொய்யுலகம்; இவ்வாழ்க்கை யனைத்தும் ஒரு பொம்மலாட்டம் போன்றது” என்று கூறும் அனுபவமுடைய ஜாதியல்லவோ நாம்! தெய்வீகத் தன்மை பொருந்திய மகான்களின் வழிவந்த நாம் ஆன்மார்த்தத்தை யலட்சியம் செய்தால் நம் முன்னோர்களுக்குத் துரோகம் செய்தவர்களாவோ மல்லவோ?

நமது மதாசார விஷயங்களனைத்தும் நமது தாய்ப்பாஷையில் தான் இருக்கின்றன. அத்தகைய பாஷையை நாம் அலட்சியம் செய்துவிட்டால், கொஞ்ச நாளையில் நமது மதமும் நாம் ஒருஜாதியாரென்பதும் எங்ஙனம் நிலைத்திருக்கும் என்பதைச் சிந்தித்துப் பாருங்கள். உங்களாலன்றோ நமது குலமும் மதமும் தாய்நாடும் முன்னேற்ற மடைந்து கௌரவ நிலைமைக்கு வரவேண்டும்? நீங்களன்றோ தாய்நாட்டின் க்ஷேமத்திற் குழைத்துக் கீர்த்திபெறவேண்டியவர்கள்?

தாய்ப்பாஷையில் அபிமான மில்லாத எந்த நாட்டாரேனும் க்ஷேமமடைந் திருக்கிறார்களா வென்று சிந்தித்துப் பாருங்கள். நம் தாய்ப்பாஷையோ மற்றப்பாஷைகளைப் போன்றதன்று, மிக்க இனிமையானது. பூரணம் பெற்றது. கடவுளால் ஏற்றுக்கொள்ளப்பட்டு அவர் அருள்பெற்றது. அது தெய்வீகத்தன்மையுடையதென்பது முன்னமே நன்கு நிரூபிக்கப்பட் டிருக்கிறது. இத்தகைய பாஷை நம் பாடசாலைகளில் கட்டாய பாடமாக வைக்கப்படாம லிருப்பதே உங்களுக்கு அதனிடம் அசிரத்தையுண்டானதற்குக் காரணம்.

சமீபகாலத்தில் நம்மவர்களே கல்வி யபிவிர்த்தி விஷயத்தைப் பற்றிய நடவடிக்கைகளைப் பெற்றுக்கொண் டிருக்கிறார்கள். ஆகையால் நமது தாய் நாட்டின் க்ஷேமத்திற்கு இன்றியமையாத இத்தகைய விஷயத்தை முன்னே கவனித்துத் தக்கபடி ஏற்பாடு செய்வார்கள் என்று நம்பியிருந்தோம். அந்தோ! இந்த விஷயம் மந்திரிகள் சபையில் பேசப்பட்டபோது நம்மவர்களில் சிலரே தாய்ப்பாஷையாகிய தமிழ் கட்டாய பாடமாக ஏற்படுத்தப்படலாகாதென்று ஆக்ஷேபித்து விட்டார்கள் என்பதை யறிய, தாய்ப்பாஷையின் அருமை பெருமையை யுணர்ந்த யார் மனந்தான் வேதனையுறாது. தாய்ப்பாஷைக்கு ஏற்பட்டிருக்கும் அவமதிப்பால் நமது ஜாதி, மதம், தாய்நாடு இவற்றிற்கு நேரிடக்கூடிய தீங்கை யுணர்ந்து நம் நாடு இன்னும் க்ஷீணதசை யடையவேண்டு மென்று கருதியேயப்படிச் செய்தார்களோ? அல்லது அதனால் விளையக்கூடிய பெருந்தீங்கு இன்னதென்பதை யுணராமலே அப்படிச் செய்தார்களோ? கடவுளுக்கே அது வெளிச்சம்.

மாணவ நண்பர்களே! நமது கெட்ட காலம் இவ்வாறிருப்பதை யுணர்ந்து, இனி நீங்கள் இதைப்பற்றிச் சிரத்தை யெடுத்துக் கொள்ளவேண்டியது அவசியமன்றோ வென்று சிந்தியுங்கள். ஒரு திருட்டாந்த மட்டும் கூறுகிறோம்: ஜபான் எதனால் இப்போதிருக்கும் உயர் நிலைக்கு வந்தது? மேல் நாட்டுச் சாத்திரக் கல்வியால் என்று கருதுவீர்கள். தாய்ப்பாஷையால் என்று நாம் கூறுகிறோம். மேல் நாட்டுச் சாத்திரங்களை நம்மவர் படிக்கவில்லையா? நாம் என்ன

பயனடைந்தோம்? ஜபானியர் அமெரிகா இங்கிலாந்து முதலிய விடங்களுக்குச் சென்று அவசியமான சாத்திரங்களைக் கற்று வந்தார்கள். அவ்வளவோடிருந்தால் அவர்கள் முன்னேற்ற மடைந்திருப்பார்களோ ? இல்லை. அச்சாத்திரங்களைத் தமது பாஷையில் மொழிபெயர்த்துத் தங்கள் நாட்டார்க்குக் கற்பித்து அவைகளை யுபயோகத்திற் கொண்டுவந்த படியாலேதான் அவர்கள் இந்த நிலையை யடைந்தார்கள். தாய்ப் பாஷையை யலட்சியம் செய்திருந்தால் எப்படி க்ஷேமமடைந் திருப்பார்கள்?

அந்தோ! நமது மாணவரோ தாங்கள் வாசிக்கும் ஆங்கில வாசக புத்தகத்தில் ஒரு வாக்கியத்தைச் சரியாகத் தாய்ப்பாஷையில் மொழி பெயர்க்கவே அசக்தர்களாக விருக்கிறார்கள். ஆனால் இது உங்கள் குற்றமல்ல. போதனை முறையின் ஊழலும், தாய்ப் பாஷை கட்டாயபாட மாக்கப்படாம லிருப்பதுமே இதற்குக் காரணம். இத்தகைய நிலைமையிலிருக்கும் வரையில் இவர்கள் அன்னிய பாஷையிலுள்ள விஷயங்களைச் சரிவரப் பூரணமாக உணரக்கூடியவர்க ளாகமாட்டார்கள் என்பது உண்மை. இத்தகைய கல்வி கற்றால் அன்னிய பாஷையிலுள்ள சாத்திரங்களை யெப்படி யிவர்கள் மொழி பெயர்த்து நமது நாட்டார் கைத் தொழில் வர்த்தகம் முதலியவற்றில் அபிவிர்த்தியடையச் செய்வார்கள் ?

உண்மையைக் கூறுமிடத்துத் தாய்ப்பாஷையில் கல்வி கற்றால் தான் எத்தகைய கல்வியும் சுலபமாக மனதில் நன்றாய்ப்பதிந்துபயனளிக்கத்தக்கதாகும். திருட்டாந்தமாக, பத்துப் பனிரண்டு வயதில் கற்ற ஆத்திசூடி, கொன்றைவேந்தன், நிகண்டு முதலியவை ஐம்பதாவது வயதிலும் நினைவிலிருக்கின்றன. சமீப காலத்தில் கற்ற இரசாயணசாத்திரம், பௌதிகசாத்திரம் முதலியவை நாலைந்து வருடங்கட்குப்பின் புதிதாகத் தோன்றுகின்றன. உலகில் எல்லா நாடுகளிலும் தாய்ப் பாஷையில்தான் எல்லாக் கல்விகளையும் கற்கிறார்கள். அந்தோ, கலிகாலக்கொடுமையோ! நம் தாய் நாடு செய்த பாபமோ நமக்கு அப்புண்ணியம் இன்னும் கிட்டவில்லை. இதே ஒரு பெருங் குறையாயிருக்க, இப்போது தாய்ப்பாஷையே யடியோடு மறைந்துவிடும் நிலைமைக்கு வந்திருக்கிறது.

நண்பர்களே! இத் தாய்ப்பாஷையை யலட்சியம் செய்வதால் இலௌகீக முன்னேற்றத்திற்கே இடையூறாக விருக்கிறதென்பது இப்போது உங்களுக்கு நன்கு விளங்கும். இது மட்டுமல்ல; ஹிந்துக்களாகிய நமக்கு ஆன்மார்த்தமே உயிரினும் சிறந்தபொக்கிஷம்.

"சங்கநிதி பதுமநிதி இரண்டுந் தந்து
தரணியொடு வானாளத் தருவ ரேனும்
மங்குவா ரவர்செல்வ மதிப்போ மல்லோம்
மாதேவன் வார்கழல்கட் கன்ப ரல்லால்.

* * * * * * *

என்று நம் முன்னோராகிய மகான்கள் அருளிப் போந்தனர். நம் தாய்ப்பாஷையிலேயே நமது ஆன்மார்த்த சாத்திரங்கள் இருப்பதால், நாம் தாய்ப்பாஷையை யலட்சியம் செய்தால் மறுமைப் பயனையு மிழப்பதோடு, நமது செய்கையால் நமது மதமும் குன்றி, நாம் ஒருஜாதியார் என்பதும் போய், நம் தாய் நாடு மிக்க பரிதாபமான நிலைமையை யெய்திவிடும்; ஆதலின், இனி நீங்களே தாய்ப் பாஷையில் சிரத்தை யெடுத்துக்கொண்டு, ஒவ்வொருவரும் அதில் தேர்ச்சியடையவும், மதக்கல்வியைக்கற்கவும் முயலுங்கள். அப்படிச் செய்வீர்களாயின், உங்களுக்கு ஆன்ம சக்தி யதிகரிப்பதோடு, தெய்வத்தன்மை பொருந்திய மனோவல்லமையுமுண்டாகும். அதனால் நீங்கள் எத்தகைய தடைகளையும் சுலபமாக வென்று மனோவல்லமையாலேயே மகா உன்னத நிலை யடைவீர்கள். நம் தாய் நாடும் பூர்வீக மகிமையை யடையும். இப்போது இவ்விஷயம் உங்களுக்குச் சுலப சாத்தியமானதாகத் தோன்றா விடினும், நாம் வேண்டிக்கொள்ளும் துறையில் பிரவேசித்து சிரத்தா பக்தியோடு தாய்ப்பாஷையிலும் மதக்கல்வியிலும் பயிற்சியடைய முயல்வீர்களாயின், நாம் மேலே கூறிய மனோ சக்தி முதலியவை எவ்வாறு சித்திக்கு மென்பது உங்களுக்கே பின்னால் விளங்கும்.

அன்பார்ந்த மாணவ நண்பர்களே! நமது வேண்டுகோளை யலட்சியம் செய்யாது ஒவ்வொருவரும் தாய்ப்பாஷையிலும் மதக்கல்வியிலும் பயிற்சியடைய ஊக்கங்கொள்வீர்க ளெனப் பன்முறையும் நாம் வேண்டிக்கொள்கிறோம். எல்லாம் வல்ல பரம தயாநிதியாகிய பசுபதி உங்களுக்கு நல்ல ஞான விளக்கமும், உற்சாகமும் தந்து அருள் புரியுமாறு மனதாரப் பிரார்த்திக்கின்றோம்.

ஓம் தத்ஸத்.

---

## போதனுமுறையும், சாதனக்குறையும்.

கீழ்வரும் விஷயம் 1921ஸ்ரீ மார்ச்சு 12உயில் திருவெறும்பூரில் நடந்த எலிமெண்டரி உபாத்திமைச் சங்க மீட்டிங்கில் என்னால் தயார் செய்யப்பட்டு வாசிக்கப்பட்டது:—

நாம் இன்று எடுத்துக்கொண்ட "பாடங்களை ஒன்றுக்கொன்று சம்பந்தப்படுத்திப் போதித்தல்" என்பதை விளக்குதற்பொருட்டு, இரண்டொரு உதாரணங்களை 'பிரத்தியக்ஷப் பிரமாணத்தைக்கொண்டு போதித்தல்' என்பதற்கிணங்க எடுத்துக்கொள்ளுவோம்.

முதலாவது.—நாம் உயிர் வாழ்ந்திருப்பதற்கு அத்தியாவசியமான காற்றை எடுத்துக்கொள்ளுவோம். அந்தத் தனிப்பட்ட காற்றை மட்டும் நாம் உட்கொள்ளவுமில்லை, வெளிவிடவுமில்லை யென்பதும் ஊகித்துணரின் விளங்கும். இந்தக் காற்றில் தண்ணீரும் கலந்துள்ளதென்பது தெரிந்

ததே. தண்ணீர் கலவாததாயின் அது மிக்க வறட்சியாயிருக்கிறதெனவும், அதிகத் தண்ணீர் கலந்திருப்பின் குளிரா யிருக்கிறதெனவும் இயம்புகிறேம். வறட்சியும், குளிரும் தோன்ருதபோது, தண்ணீரின் கலப்பு சரியான அளவுள்ளதெனத் தெரிந்துகொள்ளுகிறேம். இதன் உண்மை, யறியவேண்டில் நாம் மூச்சு விடும் காற்றை ஒரு கற்பலகையில் படும்படி செய்வதால், அதில் ஈரம் உண்டாகிறது. அதனுல் அதில் தண்ணீர் கலந்திருகிருக்கிற தென்று விளங்கும். இதிலிருந்தே நாம் உட்கொள்ளும் காற்றிலும் தண்ணீர் கலந்தே யிருக்கிற தென்பதும், தண்ணீரின் சம்பந்தம் உட்கொள்ளும் காற்றுக்கும் அவசியமென்பதும் விளங்கும்.

இரண்டாவது.—தண்ணீரை எடுத்துக் கொள்ளுவோம். பலவித நதிகளிலும், குளங்களிலும் ஸ்நானம் செய்தல் மிகப் புண்ணியமென்றும், சிரேஷ்ட மென்றும் நமது முன்னேர்கள் ஏற்படுத்தி யிருப்பதும், ஒவ்வொரு இடத்தில் உள்ள நிலமும், ஒவ்வொரு குணமுள்ளதென்று கூறியிருப்பதும், அவ்வொவ்வொரு வகை ஜலத்திலும், ஒவ்வொரு குணமுள்ள தாதுப் பொருள்கள் சேர்ந்திருப்பதும் உண்மையாகும். எங்கெங்கிருக்கும் ஜலமெல்லாம் ஒரே வகையே யெனின், ஓரிடத்து ஜலத்தை உபயோகித்துக் கொண்டிருந்தவர்கள், மற்றோர் புதிய இடத்து ஜலத்தை உபயோகப்படுத்தின், தமது தேகத்துக்கு ஒத்துக்கொள்ளவில்லை யென்கின்றனர். காரணமென்ன? அவ்வவ்விடத்தில் உள்ள தண்ணீரில் கலந்துள்ள, அவ்வவ்விடத்திலுள்ள தாதுப் பொருள்களின் குணங்களேயாம். ஆகவே, நாம் உட்கொள்ளும் தண்ணீரில் தாதுப் பொருள்கள் கலந்தே யிருக்கின்றன வென்பதும் விளங்கும். ஆங்காங்கு சீதோஷ்ணத்திற்குத் தகுந்தவாறு அமைந்திருக்கும் தாதுப் பொருள்கள் கலவாதிருப்பின், சீதோஷ்ணத்திற்கும், தண்ணீருக்கும் மாறுதலுண்டாகி—சம்பந்தா சம்பந்தமில்லாது கெடுதியை விளைவிக்கு மென்றும் ஊகிக்கலாம்.

மூன்ருவது.— ஆகாரத்தை எடுத்துக்கொள்ளுவோம். அன்னத்தை மட்டும் கலத்திலிட்டு அருந்தச் சொன்னுல் அருந்துவோருண்டா? அதற்குக் கலப்பு வஸ்துவாகக் குழம்போ, ரஸமோ, தயிர் மோரோ ஏதோ ஒன்றேனும் அவசியம் வேண்டி யிருக்கிறது. இவைகளி லொன்றிருப்பினும், எதற்கும் ஓர் பதார்த்தமாவது வேண்டியிருக்கிறது. (தண்ணீருஞ் சாதமாகச் சாப்பிடினும் உப்பேனும் அவசியம் வேண்டியிருக்கிறது.) இல்லையேல் இந்நா அவ்வன்னத்தை அருந்துவதற்கு ஏற்றுக்கொள்ள மிக்க ஆட்சேபம் செய்கின்றது—கஷ்டப்படுகின்றது—முணு முணுக்கின்றது.

இப்போது கூறியுள்ளவைகளைப்போல், நாம் நமது சிறு குழந்தைகட்குப் போதிக்கும் பாடங்களும், அவர்கட்கு அவ்விதந்தானே இருக்குமென்பதை நாம் முதலில் உணரவேண்டும். உணர்ந்தபின், ஒவ்வொரு வகைப் பாடத்தையும், அதற்கு மட்டுமுள்ள விஷயத்தை 'மொட்டைத் தலைக்கும் முழங்காலுக்கும் முடிச்சுப் போடுவது' போல் இல்லாமல், ஏறத்தாழ—முதன் முதல் ஆரம்பித்த பாடத்திற்கு அனுசரித்ததாகவே மற்றைய பாடங்களையும் நாம் நமது ஆகாரத்திற்கு, எதெதற்குப் புளிப்பு, கார்ப்பு, கைப்பு, உவர்ப்பு, துவர்ப்பு, இனிப்பு ஆகியவற்றைத் தகுந்தவாறு சம்பந்தப் படுத்துகிறேமோ, அவ்விதம் சம்பந்தப்படுத்திப் போதித்தாலே

நமது நாவில் அத்தகைய ஆகாரங்கள் செல்வதுபோல், மாணவர்களின் மனமாகிய நாவிலும், நாம் உண்பிக்கும் பாடங்களாகிய ஆகாரங்கள் செல்லுமென்பதைக் கவனித்தல் அத்தியாவசியமாகும்.

உதாரணமாக, முதன் முதலில் காலையில் வந்தவுடன் வாசகபாடம் ஆரம்பிக்கிறோமென்று வைத்துக்கொள்வோம். அதில் நமது அஸிஸ்டெண்டு இன்ஸ்பெக்டரவர்களாகிய கனம் எஸ். ஜி. தானியேல், பீ.ஏ., அவர்களின் 3-ம் புத்தகத்தில் 13-ம் பாடமாகிய 'புத்திசாலிப் பையன்' என்ற பாடத்தை நடத்தியதாக வைத்துக்கொள்வோம். அதற்கு அடுத்து நடத்தவேண்டிய பாடங்களாகிய,

1. பார்த்தெழுதல்.—(நேரத்தில்) அப்பாடத்தில் உள்ள சில வரிகளைப் பார்த்து எழுதச் செய்தல்.

2. சொல்வதெழுதல்.—படித்துப் பார்த்ததும் எழுதினதும் ஞாபகமிருக்கிறதாவெனப் பரீக்ஷிக்கிறதற்காகவும், பார்த்து எழுதினதையே சொல்லி எழுதச் செய்தல்.

3. பொது அறிவு.—சர்க்கரை உண்டாகும் கரும்பைப்பற்றி.

4. இயற்கை யறிவு.—தராசின் விட்டம், தட்டு ஆகியவற்றின் இரும்பு, பித்தளை உலோகங்கள்.

5. சுகாதாரம்.—தராசு, சர்க்கரை வைத்திருக்கும் பாத்திரம், கடைக்காரன், கடை இவற்றின் சுத்தம்.

6. அரசியல்.—அளவுகளைக் கவனிக்கவேண்டிய (கிராம) அதிகாரி.

7. கணிதம்.—ஒரு வீசை சர்க்கரை 12-அணு வீதம், ஒரு வியாபாரி 28-வீசை வாங்கினால் எத்தனை அணு கொடுக்கவேண்டும்?

(2) ஒரு வீசை 40-பலமென்றால், 9-வீசைக்கு எத்தனை பலமிருக்கும்.

(3) 160-வீசையுள்ள ஒரு பெரிய எடை சர்க்கரையை மொத்தமாக வாங்கி, 8-பேர் எடுத்துக்கொண்டால் ஆளுக்கு எத்தனை வீசை வரும்? முதலிய பல.

8. சித்திரம்.—தராசு (கரும்பும் சர்க்கரை செய்யவேண்டிய உபகரணங்களும்).

9. கிண்டர் கார்ட்டன் தொழில்கள்.—குச்சி வைத்தல்—தராசு. ஆக இவ்விதமாகவே நாம் நடத்தினால் எல்லாப் பாடங்களின் பொருள்களும் ஒரேகதை அல்லது பாடத்தின் சம்பந்தமாகவே வருதல் பிள்ளைகட்கு ஆச்சரியமாகவும், சந்தோஷமாகவும் இருக்கும். ஆனால் ஒவ்வொரு பாடம் ஆரம்பிக்கும் போதும் சம்பந்தப்பட்ட பொருள் முதற்பாடமாகிய வாசகத்தின் சம்பந்தமென்பதை நாம் குழந்தைகட்கு உணர்த்தித் தெரிவித்துக்கொண்டே போவோமாயின், பிள்ளைகளுக்குண்டாகும் குதூகலத்தைக் கூறுவதற்கு முடியாததாயிருக்குமென்பது எனது அனுபவமாகும்.

குறிப்பு.—சம்பந்தப்படுத்தும் பாடங்கட்கு, மூலாதாரமாயுள்ள பாடத்தை முதன் முதலில் நடத்தவேண்டியது அவசியம். மூலாதாரமான

பாடம், ஒருநாளின் மத்திய லிருக்குமாயின், அப்பாடத்திற்கும் அதன் முந்திய பாடங்கட்கும் சம்பந்தமில்லாது போகின்றது. சம்பந்தப் படும்படியாகக் கிரமப்படுத்திக் கொண்டாலும், பிள்ளைகட்குச் சம்பந்தா சம்பந்தம் தெரியாது போய்விடும். அதனுல் உற்சாகமில்லாதும் போய்விடும். பின்னுல் வரும் பாடத்தின் சம்பந்தமென்றுல், பின்னுல் வருவதின் முழுதாத்பரியமும் முன்னுல் தெரிவதற்கில்லை. தெரியாமற் போமாயின், முன் கூறியதுபோல் உற்சாகமும், பாடத்தில் ஊக்கமும், கவனமும் இல்லாதுபோகும். சம்பந்தப்படுத்துதலிலும் அர்த்தமே யில்லை.

ஆகவே, மூலாதாரமான பாடம் முதலில் நடத்தவேண்டுமாதலால், சிலர் கதையை மூலாதாரமாகக் கொள்ளுகின்றனர். முதல், அதாவது, ஒரு தினத்தில் பாடங்கள் நடத்த ஆரம்பிக்கும் காலத்தில், பிள்ளைகட்கு அவர்களின் புத்தி சுறு சுறுப்பா யிருக்கும் காலை நேரத்தில்—முதல் மணியில்-முக்கியமான தமிழ் (வாசகபாடம்), கணிதம் நடத்தவேண்டு மாதலால், கதையை நடத்துதல் உசிதமா யிராதென்று எண்ணுகின்றேன்.

ஆகையால், முதன் முதலில் வாசகபாடத்தையே நடத்துவது உசிதமாதலால், அதை மூலாதாரமாக வைத்துக்கொண்டு, அதன் சம்பந்தமாகவே மற்றப்பாடங்களையும் ஒன்றுக்கொன்று சம்பந்தப் படுத்துதல் உசிதத்திலும் உசிதமென்பதும் உணரக்கூடியது.

வாசக பாடத்துடனேயே மற்றப் பாடங்களையும் சம்பந்தப்படுத்திப் போதிக்கும்போது அப்பாடங்கள், வரிசைப்படுத்தி யிருக்கும் பாடக்கிரமத்தின்படி வரிசைக்கிரமமாக ஒத்துவரா தென்பதும், முன்பின்னுகவே போதிக்க நேருமாதலால், பாடக்கிரமத்தின்படி போதிப்பதற்கு முரணுக எற்படுமென்பதும் விளங்கும்.

ஆகவே, சம்பந்தப் படுத்திப் போதித்தலைப் பாடக்கிரமத்திற்கும், பாடக்கிரமத்தை, சம்பந்தப் படுத்திப் போதிப்பதற்கும் இணங்க நடத்துவதும் இயலாத விஷயமென்பதும் உணரக்கூடியது. இவ்விருவகையில் 'மத்தளத்திற்கு இருபுறமும் இடி' என்பதைப்போல், ஆசிரியர்கள் பரீக்ஷாதிகாரிகளின் தனிப்பட்ட முறைகளால் அவர்களின் அதிகாரத்தில் இடிபடுவதும், பட நேருவதும் ஆச்சரிய மாகாது.

இக்குறிப்பு, உபாத்திமார் சங்கத்தில் வாசித்த இவ்வியாசத்தைப் பத்திரிகைக்கு அனுப்ப எழுதுங்கால் தனியாக எழுதிச் சேர்க்கப்பட்டதாகும்.

நாம் எவ்விதம் பிள்ளைகட்குக் குதூகலத்தை யுண்டாக்கிப் பாடங்களைப் போதிக்கவேண்டு மென்கிறேமோ, வற்புறுத்தப்படவும் செய்யப்படுகிறேமோ அவ்விதமே, நாம் நமது பிள்ளைகளிடமும் நமது வேலையிலும் குதூகலமா யிருக்கும்படி நம்மைச் செய்யவேண்டியது நமது மேலதிகாரிகளின் கடமையல்லவா? மேலே கூறியவாறு (முறையை) அவர்கள் நம்மை வற்புறுத்தும்போது, அவர்களும் அம்மாதிரி நம்மை நடத்தும் விதத்தில் செய்து காட்டவேண்டாமா? நமக்கு அவர்கள் ஆசிரியர்களல்லவா? ஆசிரிய ரெவ்விதமோ அவ்விதமே யல்லவா மாணவரும்.

நாம் நமது சங்கங்களில், குறைந்துகொண்டே வரும் போதனு அறிவை அபிவிருத்திசெய்து கொள்ளுவது எவ்வளவு அவசியமோ அவ்வளவு அவசியம் அவ்வபிவிருத்திக்குக் காரணமாகிய மனம், சஞ்சலப் படாமல் செய்ய வேண்டியது மல்லவா? அவ்விதம் சஞ்சலப்படாம லிருப்பதற்கு, அச்சஞ்சலத்திற்குக் காரணமாகிய, தற்கால நிலைமையின் கஷ்டநிஷ்டூரங்களையொழிக்கவேண்டுமல்லவா? அக்கஷ்ட நிஷ்டூரங்களைப்பற்றி நமது சங்கங்களில் நாம் ஒருவர்க்கொருவர் எடுத்துரைத்து அவற்றை அகற்றிக் கொள்ள, நமது சங்கத்துப் பிரஸிடென்டவர்கள் மூலமாயும், நமது நிர்வாகிகள் மூலமாயும் கடந்த 4-5 மாதங்கட்கு முன்பெல்லாம் நாம் கேட்டுக் கொண்டு வந்த தனைத்தும் நண்பர்கட்கு நினைப்பிருக்கலாம். அதனால் அக்குறைகள் ஒருவாறு நிவர்த்திசெய்யப்படுமென்னும் நல்லெண்ணத்துடன் சஞ்சலத்தை அகற்றிக் கொண்டவர்களாய், ஒருவாறு மனச்சாந்தி அடைந்தவர்களாய், நமது வேலையில் கூடுமானவரையில் கவனஞ்செலுத்தி வந்தோம். அப்போது அவைகளை நமது ஆசிரியர்களாம் பரீக்ஷாதிகாரிகளும் நிர்வாக அதிகாரிகளும் ஒரு சிறிதும் ஆட்சேபித்தார்களில்லை. இப்போதோ, எடுத்துக்கொண்ட, 'ஒன்றுக்கொன்று சம்பந்தப்படுத்துதல்' என்ற விஷயத்திற்கு முரணாய், ஒரே பிடிவாதமாய்க் குறைகளைப் பற்றிப் பேசப்படா தென்கின்றனர். இவ்வகையில் 'ஒன்றுக்கொன்று சம்பந்தப்படுத்துதல்' எங்கே? ஒன்றுக்கொன்று வேறுபிரித்தல் தானே ஆகிறது! பேசப்படாதென்றால், அப்போது (தற்கால நிலைமையில்) நமது மனம் என்னவாகும்? சஞ்சலப்படின் போதனையில் புத்தி யெப்படி செல்லும்? சரியானபடி போதிக்கக் கவனமெங்குசெல்லும்? உற்சாகமெங்கே? ஊக்கமெங்கே?

கவர்னர், டைரக்டர் முதலியவர்களெல்லாம், குறைகளைத் தாராளமாய்ச் சொல்லும்படியும், கூடிக் கலந்து பேசும்படியும் சொல்லுவதின் அர்த்தமென்ன? அவர்களுடைய வாக்கின் செல்வாக்கு என்னவாகிறது? அவற்றிற்கு மதிப்பு எங்கே?

சில வருடங்கட்கு முன்னே இந்த (லால்குடி, தற்போது ஸ்ரீரங்கம்) ரேஞ்சில் பரீக்ஷாதிகாரியா யிருந்தவரும், தற்போது நெல்லூர் ஜில்லா பரீக்ஷாதிகாரியா யிருப்பவருமாகிய ஸ்ரீமான் பார்த்தசாரதி நாய்க்கரவர்களால் ஏற்படுத்தப்பட்டு, தற்போது ரேஞ்சு பரீக்ஷாதிகாரியா யிருப்பவராகிய ஸ்ரீமான் ஜி. தாமோதர முதலியாரவர்கள் தமது ஜார்ஜ்டவுன் ரேஞ்சின் எலிமெண்டரி உபாத்திமைச் சங்கத்தில், நல்லாசிரியன் பத்திராதிபராகிய ஸ்ரீமான் கா. நமச்சிவாய முதலியாரவர்களைக்கொண்டு, சென்ற பிப்ரவரி மாதம் 5-ந் தேதியில் 'தற்காலத்தில் ஆரம்பப் பாடசாலை உபாத்தியாயர்களின் நிலைமை' யைக் குறித்து உபந்யசிக்கும்படி செய்திருப்பதும் கவனிக்கத் தக்கதாயிருக்க, நமது (ஸ்ரீரங்கம்) ரேஞ்சின் ஸென்டர் சங்கங்களிலும் வேறு சில ரேஞ்சுகளிலுள்ள சங்கங்களிலும் நம்முடைய பரீக்ஷாதிகாரிகள், காலத்திற்கும், தங்களைப்போன்ற பரீக்ஷாதிகாரிகளின் செயல்கட்கும் முரணாய்க் காரியங்கள் நடத்துவதும் மெத்த விசனிக்கத்தக்கதே. இது புதிய அரசியல் திருத்தத்தின் மகிமைபோலும்! ஏழை எலிமென்டரி உபாத்திமார்களிடம் நியாயமில்லாத வழியில், வயிற்றுக் கொடுமைக்காகப் புலம்பும் விஷயத்தில், அடக்கு முறைகளை உபயோகித்தலும் காருண்யமாகுமோ? ஏ! பராந்தாமா! எல்லாம் வல்ல

இறைவனே நீதான் அவர்களின் மனதில் புகுந்து,கருணையை யூட்டி, ஏழை யாகிய எங்களை இரட்சிக்கவேண்டும்! எங்களுடைய இன்பமும், துன்பமும் உனக்கே அர்ப்பணமென இங்குக் கூடியிருக்கும் உன் அடியார்களாகிய ஏழை யேங்கள் அனைவரும், உனது திருவடிகளை மனத்திருத்தித் துதிக் கின்றோம்! கருணை புரிவாயாக!

P. பரிமணப்பல்லவராயர்.

---

குறிப்பு:—இக்கஷ்ட காலத்தில் கருணை பொருந்திய நமது துரைத் தனத்தார் ஏறக்குறைய எல்லா இலாகா உத்தியோகஸ்தர்களுக்கும் சம்ப ளத்தை யுயர்த்தி யிருக்கிறார்கள். அவரவர்கள் ஒன்று சேர்ந்து தங்கள் தங்கள் குறைகளைக் கலந்துபேசித் துரைத்தனத்தாருக்கு அறிவிக்கும்படி தாராளமாக இடங்கொடுத் திருக்கிறார்கள்.

அந்தோ அவ்வாறிருக்க இந்த ஏழை ஆரம்ப உபாத்தியாயர்களைப் பற்றியிருக்கும் அஷ்டம சனிமட்டும் இன்னும் தொலையாம விருப்பதே மிக்க விசனிக்கத்தக்க விஷயம். இது நமது சந்ததியாரின் ஆரம்பக் கல் விக்குப் பெருந்தீங்கை விளைவிக்கும் விடம்போன்ற குறையாகும். இந்த ஆசிரியர்கள் முறையீடே இன்னும் துரைத்தனத்தாரின் கருணையாகிய செவிகளில் போய்ச் சேராதிருக்க, இப்போது அவர்கள் குறைகூறிக் கொள்ளவே கூடாதென்றே வாயப்பூட்டிடுவதாயின், அது எங்கேனும் நீதி யாகுமோ.

இப்படிச் செய்பவர்கள் தங்கள் வரையில் திருப்தியான ஊதியம் பெறும நம்மவர்களாகிய மேல் அதிகாரிகள் தானே! அந்தோ நம் நாட் டாருக்கு ஏழைகளிடம் கருணையும், நமது நாட்டார் என்ற அபிமானமும் கூடத் தோன்றாதிருப்பது கலியின் வலிமையாலேயே யெனலாம் போ லும். இவ்வாறு இநத ஏழை யுபாத்திமார்கள் தங்கள் குறைகளைப் பற்றிப் பேசாவண்ணம் அடக்கிவிட்டு இராஜாங்கத்திற்கு நேரிடக்கூடிய செல வைக்குறைக்க உதவிசெய்தால் இராஜாங்கத்தா தம்மேல் சந்தோஷங் கொள்வார்க ளென்று இவ்வதிகாரிகள் கருதுகிறார்களோ? அந்தோ இத னால் நம்மக்களின் கல்வி யபிவிர்த்திக்கு இடையூறு நேருமென்றுணர்வ தோடு, இப்பரிதாபமான உபாத்திமார்கள் உணவிற்கும் போதாமல் படும் கஷ்டம், "ஏழை யழுத கண்ணீர் கூறிய வாளோ டொக்கும்" என்பதை யிவர்கள் கவனிக்க வேண்டாமோ? அருகிலிருந்து அவர்கள் கஷ்டங்களை நேரில் பார்த்துக்கொண் டிருக்கும் நமமவர்களே அவர்கள் விஷயத்தில் கருணை வாராவிட்டால் எட்டவிருந்து இவர்கள் மூலமாக யாவுமறிந்து நீதி செலுத்தும் இவர்களிலும் மேலுள்ள அதிகாரிகளுக்கு எப்படிக் கருணை யுண்டாகும்.

ஆயினும் மேல் அதிகாரிகள் எப்படியும் இவ்வேழை யாசிரியர்களின் பரிதாப நிலைமையைக் கவனிப்பார்க ளென்றே பூரணமாக நம்புகிறோம். எங்குநிறைந்த ஞானசொரூபியாகிய ஒருவன் ஏழைகளுக் கருள்புரிவான் என்பது உண்மை.

பத்திரிகாசிரியர்.

## புறங்கூறாமை

'உலகில் மானிடராகப் பிறந்த நாம் நற்குண நற்செய்கைகளைக் கைக்கொண்டு வாழவேண்டுவது அவசியம். அந்நற்குண நற்செய்கைகளுள், புறங்கூறாமை என்பது ஓர் முக்கியமான இலக்ஷணம். புறங்கூறாமை என்றால், காணாத இடத்தே பிறரை இகழ்ந்து பேசாமல் இருத்தல் என்று பொருள் படும்; இதையறியாத சிலர் புறங்கூறி, பெருமையை இழந்து, தாழ்ந்த நிலைமையை அடைகின்றனரன்றோ ?

ஆண்டவன் அளித்த அற்பாயுளில், மாந்தர் புறங்கூறுதலைக் கைக்கொண்டாரேயானால், இவர்கள் என்னபலனை அடைவார்கள்? சில மனிதர்கள், இதையே ஆபரணமாக அணிந்துகொண் டிருக்கிறார்கள்.

ஒருவன் உலகத்தில், தானதருமத்தைச் செய்யாவிடினும், புறங்கூறா திருத்தலே மேன்மையாம்; இதைககருதியே வள்ளுவனார்.—

“ அறங்கூறா னல்ல செயினு மொருவன்
புறங்கூறா னென்ற லினிது” என்று சொல்லியிருக்கிறார்.

பின்னும் சிலர், மனிதர்களைக் கண்டவிடத்து, அவர்களைப் புகழ்ந்து பேசுவதும், பிறகு, மற்றொருவனிடத்தில், அவர்களைப்பற்றியே கோள் சொல்வதுமாய்த் திரிகின்றனர். ஒருவனைத் திருப்திபண்ணுவதற்காக, மற்றொருவனைப் பற்றி புறங்கூறினால், அது பழிபாவங்களைச் செய்த தற்கு ஒப்பாகும். இவ்வாறே சிலர் ஜீவனஞ்செய்து வருகின்றனர். இப் போப்பட்டவர்கள், கடைசியில், இடுக்கியிற பட்ட எலிகள் போலவும், அக்கினியில் விழுந்த பறவைகளைப் போலவும் வருந்துவார்கள் என்ப தற்கோர் ஐயமும் இல்லை.

“ அரசன் அன்று கேட்டால், தெய்வம் நின்று கேட்கும்”

என்று ஆன்றோர் சொல்லியவண்ணம், எல்லாம் வல்ல ஈசன் இறுதியில் இவர்களுக்கு, இடுக்கண்களையே உண்டு பண்ணுவார் என்பதற் கோர் தடையுமில்லை. இவர்கள் இவ்வாறு வாழ்வதைவிட, இறந்து போவதே நலம், இதையே வள்ளுவர்

“ புறங்கூறிப் பொய்த்துயிர் வாழ்தலிற் சாத
லறங்கூறு மாக்கம் தரும்” என்றருளியுள்ளார்.

பிறர் குற்றத்தைச் சொல்லுவோன் பழிக்கும் அஞ்சான், ஆகா ! இப் பேர்ப்பட்டவர்கள் உலகிலிருந்தால், நம் தாய்நாடு சிறப்படைவ தெங்ஙனம் ? பின்னும், மாணவர்களிடத்தில் இப்பெரும் பிழை இருக்கிறது. இவர்கள் இளமையிலேயே இதைக் கைக்கொண்டால், பின்பு உலகில் வாழ்வது எங்ஙனம் ? “இளமையிற் கல்” என்று சொல்லிய வண்ணம், புறங்கூறாமை என்ற நீதியை இளமையிலேயே கற்றுக் கைக்கொள்ள வேண்டும். இளமையிலேயே, புறங்கூறுதலை விட்டுவிட்டால் தான் பிறகு முதிர்ந்த காலத்தில் சுகமாகவாழலாம். அன்றேல், இதை வளரவிட்டு' விட்டால், துன்பக்கடலில் ஆழ்வோம் என்பதற்கோர் ஐயமும் இல்லை.

பிறர் மனையில் வாழ்ந்து வருகிறவர்கள், தம் நிலைமையையும் கருதாமல், எஜமானர்களைப் பற்றிப் புறனுரைப்பின், அவர்களுக்கு ஈசன் எக்கதி கொடுப்பார்' என்பதை நீங்களே உணர்ந்து கொள்ளலாம். இதைப் பற்றி, பின்வரும் பழமொழிப் பாடலால் நீங்கள் தெரிந்துகொள்ளலாம்.-

"பண்டின்ன மென்று தமரையுந் தம்மையுங்
கொண்ட வகையாற் குறைதீர நோக்கியக்கால்
விண்டவரோ டொன்றிப் புறனுரைப்பின் அஃதன்றே
உண்டவிற் றீயிடு மாறு" (பழமொழி)

ஆகவே, மேற்சொன்னபடி, நாம் புறங்கூறாம லிருந்தால், இகபர மிரண்டிலும் சுகத்தைப் பெறலாம். புறங்கூறினுல், கொஞ்சக்காலம் வரைக்கும், அதாவது, எப்படி அணையப்போகிற விளக்கு பிரகாசமாக எரியுமோ, அப்படி மிகவும் கொஞ்சக்காலம் வரையில் சுகத்தைப் பெறலாம். பிறகு, கடைசியாக, சூரியனைக்கண்ட பனிபோல், இந்த இன்பங்களை விட்டுவிட்டுத் துன்பங்களைக் கைக்கொள்ள வேண்டியதா யிருக்கும்; பலரும் இகழ்வார்கள்; மானமும் போய்விடும். "மானமழிந்தபின வாழாமை முன்னினிதே" என்று ஆன்றோர் சொல்லியவண்ணம் உலகில் உயிரை வைத்துக்கொண்டு வாழவும் வேண்டுமா?

ஆகவே, சகோதர, சகோதரிகாள்! ஆண்டவன் அளித்த அற்பாயுளில், நம் வாழ்நாட்களைப் புறங்கூறுவதில் செலுத்தாமல், மறுமைக்கு வேண்டியதான தருமங்களைச் செய்து, எல்லாம் வல்ல பரம்பொருளை *அநுதினமும் ஆராதிப்போமாக.

K. கிருஷ்ணன்,
சிவன் கோயில் தெருவு, இளசை.

---

குறிப்பு.—ஒருவரைப்பற்றிக் கூறும்போது அவர்களுடைய நல்லவிஷயங்களைப்பற்றிமட்டுமே கூறவேண்டு மன்றி அவர்களிடத்துள்ள கெட்ட விஷயங்களைப்பற்றிக் கூறக்கூடாதென்பது ஆன்றோர் கொள்கை. ஆனல், உலகில் அநேகர் அதற்கு முற்றும் மாறாக நடக்கிறார்கள். ஒருவரைப் பற்றிப் பேச நேர்ந்தபோது அவர்களிடத்தில் புகழ்ச்சிக்குரிய நடக்கைகள் நூறிருப்பினும் அவற்றில் ஒன்றையேனும் கூறாது, அவர்களிடம் அற்பமான சிற குற்றங்கள் இரண்டொன் றிருந்தாலும் அவற்றையே முன்னே கூறுகிறார்கள். க என்பவனிடம் ம என்பவனைபபற்றிப் பேசும்போது ம என்பவனுடைய குற்றங்களைக் கூறுவதும், பிறகு, அவ்வாறே ம என்பவனிடம் க என்பவனுடைய குற்றங்களை மட்டுமே கூறுவதும் சிலர்க்கு இயற்கையாக விருக்கின்றன. ஆனல் க, ம இருவரும் கலந்து பேசிக்கொண்டால் நம்மை மிக்க இழிவாகக கருதுவார்களே யென்பதை அத்தகைய அறிவினர்கள் கருதுவதில்லை. இத்தகையோர் பிறர் நம்மைப்பற்றி எவ்வளவாகக் கருதுகிறார்க ளென்பதைச் சற்றும் சிந்திப்பதில்லை. இத்தகைய நடக்கை அதை யுடையோனுக்கு மிக்க இழிவையுண்டாக்குவதால் அறிவாளிகள் அதற்குச் சற்றும் இடந்தரலாகாது. பத்திரிகாசிரியர்.

---

## விதவா விவாகம் கற்புடையதல்ல.

"கடமா தொலைச்சிய கானுறை வேங்கை
யிடம்வீழ்ந்த துண்ணா திறக்கு—மிடமுடைய
வானகங் கையுறினும் வேண்டார் விழுமியோர
யான மழுங்க வரின்" 'நாலடியார'

இவ்விதக் கற்புவாய்ந்த மங்கையர்கள் யாது செய்யினும் அதை மறுக்க மும்மூர்த்திகளாலும் முடியாது. திருஷ்டாந்தமாக அரன், அரி, பிரமன் என்று சொல்லக்கூடிய மூன்று மூர்த்திகளும் சேர்ந்து, அத்திரி மஹாரிஷியின் பத்தினியாகிய அனுசூயையின் கற்பைச்சோதிக்க எவ்வளவோ முயற்சிகள்செய்தும் வீணானதும் தவிர, அவர்கள் அக்கற்பரசியின் மகிமையால் குழந்தைவடிவமுற்றுக் கஷ்டத்துடனிருக்க, இச்செய்தியைச் செவியிலேற்ற அவர்கள் பத்தினிகளாகிய உமை, இலக்ஷ்மி, சரஸ்வதி என்ற மூன்று ஸ்திரீகளும் வந்து தாழ்ந்து கேட்டதின் பின் அவர்களுக்கிரங்கி, அவ்வுத்தமி அம்மூர்த்திகளினுடைய சுயவடிவம் வரும்படியாகச் செய்தனள். இவ்வதிசயத்தை அனுபவித்த மூன்று தேவர்களும் அம்மாதைப் புகழ்ந்து தம தம் பதிக் கேகினர்.

இவ்விதக் கற்புவாய்ந்த மங்கையர்கள் நம் நாட்டில் வாசம் செய்ததனால் அல்லவோ மாதம் மும்மாரி பொழிந்து சகல கோடி ஜீவாத்துமாக்களும் செழிப்புற்று வாழ்ந்து வந்தன. இவ்வித மங்கையர்களின் கற்பை இழக்கும்படி முயற்சி செய்தால் பெரும பாவத்துக்கிடமாகும். மேலும், அவர்கள் பிராணன் நீங்கும் காலத்தில் எதை ஸ்மரித்துக்கொண்டு செல்கிறதோ, அதன் மேல்லயே அவர்கட்கு அதிகப் பிரியம் ஏற்படும். அப்படிப் பிரியத்துடன் ஸ்தூல தேகத்தை விட்டு நீங்கும் ஜீவனுக்குச் சஞ்சலம் உண்டாகும்படி செய்தால் அப்படிச் செய்தவர்களின் குடும்பமும் சஞ்சலத்துக்கிடமாகும். நமது பிதாக்கள் மனவருத்தம் அடைந்தால் அவ்வருத்தம் பின் சந்ததிகளை வருத்தும்.

மேலும் இல்லற தர்மத்தை நடத்தும் ஓர் வரனுக்கு இப்பூமியில் நன்மைகளுக்கும், தீமைகளுக்கும், சுகபோகங்களுக்கும் உரிமையுடையவளாய அமைந்த மனையாளிடத்தில் அதிக அன்பு ஏற்படுவது சகஜமே. மேலும் தாய், தந்தை, பிள்ளை, உறவினர், உடன்பிறந்தார்களாகிய இவர்கள் இவ்வுலகத்தை விட்டு நீங்கி விட்டால் அவர்களால் உண்டாகும் நன்மைகள் ஒவ்வொன்றாக நீங்கும். தனது பத்தினியினுடைய பிராணன் நீங்கி விட்டால் யாவும நீங்கும் எனபதே அறிவுடையோர்களின் உண்மையான கொள்கை.

“தாயோ டறுசுவைபோம் தந்தையொடு கல்விபோம்
சேயோடு தானம்பற்ற செல்வம்போம—மாயவாழ்
வுற்றா ருடன்போம் உடற்பிறப்பாற் றோள்வலிபோம்
பொற்றாலி யோடெவையும் போம”

இவ்வித ஒற்றுமையுட னிருக்கும் வதூவரர்களில் அவ்வரனுக்குப் பால்யத்திலோ, அல்லது வயோதிக காலத்திலோ, எமதூதர்கள் வந்து (பிராணன ஸ்தூல தேகத்தை விட்டு நீங்கும்போது “சித்ர குப்தம்”=சித்ர படம், குப்தம்=ரஹஸ்யம) என்னும் படத்தை, அச்சமயத்தில் கண்களைத்திறந்துகொண்டிருந்தாலும, மூடிக்கொண்டிருந்தாலும், கண்களுக்கு முன் அந்தப்படத்தில் மனையாளின் உருவம் தோன்றும்படி சாக்ஷியாயிருக்கப்பட்ட ஜீவாத்துமா காட்டுகிறான். அதைப்பார்த்து மருள மருள ஸ்மரித்துக்கொண் டிருக்கும்போது அவனது பந்து ஜனங்கள் அவனை

நெருங்க வந்து யார் எதைச் சொல்லியபோதிலும் அவனுக்கு எந்தச் சங்கதியும் கேட்கமாட்டாது. ஏன்? மனம் ஸ்ரோத்ரேந்திரியம் இரண்டும் கலந்து வேலை செய்தால்தான் விஷயங்களைக் கிரஹிக்குமே யொழிய, மனம் வேறு இந்திரியத்துடன் கலந்திருக்கும்போது எவ்வளவு சப்தித்துச் சொல்லிய போதிலும் பிரயோஜனமில்லை. இவ்விதம் மனையாளை ஸ்மரித்துக்கொண்டே பிராணனை விடுகிறான். ஸ்தூல தேகத்தை விட்டகன்ற பிராணன் பின்னும் தன் மனையாளிடத்தில் அன்புகொண்டே திரியும். இவ்வித அன்புடனிருக்கும் ஆத்மாவுக்குத் துரோகமாக மறு விவாகம் செய்தால் அப்பெண்ணும் அப்பெண்ணை வகித்த வானும் கொடிய துரோகம் செய்தவர்களே யாவார்கள். அத்துரோகம் ஒருகாலும் நீங்காது. பெண்கள் ருதுவானாலும் ருதுவாகாவிட்டாலும் மறு விவாகம் செய்வது பாவமேயாகும். விவாக முறையைப்பற்றிச் சென்ற வருஷத்தில் நமது ஆனந்தபோதினியில் 5-ம் தொகுதி 10-ம் பகுதியில் 371, 371, 372-ம் பக்கம் பார்க்க.

மேலும், பெண்ணின் பெற்றோர்கள் தன் பெண்ணை ஓர் வரனுக்கு மணம் செய்து கொடுப்பதாக எப்போது நிச்சயித்தாகி விட்டதோ அப்போதே அப்பெண் அவ்வரனுக் குரியவளாகிறாள். திலகவதியார் (அப்பர் சுவாமிகளின் தமக்கையார்) என்கிற பெண்ணைப் பெற்றோர் ஆகிய தந்தையார் தம் மரபிற்கு ஒத்த மரபினையுடையவராகிய கலிப்பகையார் என்பவருக்கு மணம் பேசுவித்தார். விவாக தினம் ஒன்றும் நியமிக்கவில்லை. அதற்குப் பின் கொஞ்ச தினங்கள் கழிந்ததும் திலகவதியாருடைய பெற்றோர்களும் மணம் பேசுவித்த வரனும் தேகவியோகம் அடைந்தார்கள். இப்பரிதாப நிலையைச் செவியிலேற்ற யாவரும் வருத்த முற்றனர். கலிப்பகையார் இறந்த சமாசாரந் திலகவதியாருக்குச் செவிப்புலனாக, அவர் "என்னுடைய பிதா மாதாக்கள் என்னை அவருக்கு மணம் செய்து கொடுக்க உடன்பட் டிருந்தமையால் இவ்வுயிர் அவருக்கே உரியது. ஆதலால் இவ்வுயிரை அவருயிரோடும் இசைவிப்பேன்" என்று இறக்கத்துணிந்தார். அது கண்ட மருணீக்கியார் வந்து திலகவதியாருடைய இரண்டு பாதங்களிலும் விழுந்து அழுது "அடியேன் நம்முடைய பிதா மாதாக்கள் இறந்த பின்னும் உம்மையே அவர்களாகப் பாவித்துப் பூசிக்கலாம் என்றன்றோ உயிர் வைத்துக்கொண் டிருக்கிறேன். அடியேனைத் தனியே கைவிட்டிறப்பீராயின் அடியேன் உமக்கு முன்னமே இறந்து விடுவேன்" என்றார். திலகவதியார் அதைக்கேட்டுத் தம்பியார் உயிரோடு இருக்கவேண்டும் என்னும் அன்பினால் தமது கருத்தைத் தடுத்து உயிர்தாங்கி வேறொருவரையும் விவாகஞ்செய்யாது சிவபக்தி உள்ளவராகி வீட்டிலே தவஞ்செய்துகொண் டிருந்தார். (இதன் விரிவைப் பெரிய புராணத்தில் பார்க்க.)

பருவம் அடைவதற்கு முன் ஒரு பெண் விதவையானால் அப்பெண் பருவம் அடைந்த பின் தன் கணவன் மரித்த செய்தி பிறரால் கேள்விப்பட்டுத் தன்னுடைய சுகத்தை எளிதில் மறந்து கடவுளைத் தியானித்து நற்கெதி அடைவதைத் தவிர்த்து, பாவமே உருவமாக அமையப்பெற்ற மறுவிவாகம் செய்து, சமீப காலத்துக்குள் அவ்வரனும் மரித்து விட்டால், அதற்குப்பின் அப்பெண் தன்வாழ்நாட்களினின்று நீங்குவதெப்படி?

ஆகையால், அவரவர்களுக்கு அயன் விதித்த பிரகாரம் நடந்தே தீரும். மேலும் ஒருவன் தான் ஜெனனமான தினத்திலிருந்து கஷ்டப் பட்டு வாழ்ந்து வந்தால், அவனுக்கு அவ்வாழ்வு கஷ்டமாகத் தோன்ருது. முதலில் சுகம் அனுபவித்துப் பின்பு கஷ்டம் அனுபவித்தால் அக்கஷ்டம் அதிக கஷ்டமாகத் தோன்றும். ஆகையால் பருவம் அடைந்து சமீப காலத்துக்குள் விதவையாளுல் அப்பெண்ணே தான் அனுபவித்த சுகத்தை மறந்து தனது வாழ்நாட்களைக் கழிப்பதாளுல் ஒன்றும் அறியாத பால்யப் பெண் கணவனை இழந்தால், பருவ மடைந்த பால்ய விதவைகளைப் பார்க்கிலும், எளிதாகத் தனது வாழ் நாட்களினின்றும் நீங்கலாம்.

தற்சமையம் சில வகுப்பினர்கள் விதவா விவாகத்தை யனுசரித்து வருகிருர்கள். அவ்விதம் அனுசரிப்பதளுல் வருந்தீங்கு மிக உள. விரிக்கிற் பெருகும்; சுருக்கமாய்ச் சொல்லப் புகுங்கால் முதலில் வதுவார்க ளிருவருக்கும் கொஞ்சம் மனஸ்தாபம் ஏற்பட்டால் போதும்; அப்போதே அவ்வரன் வேறு மனையாளையும், அப்பெண் வேறு கணவனையும் தேடிக்கொள்கிருர்கள். இவ்விதம் இரண்டு, மூன்று, நான்கு கணவன் தேடும் பெண்களும் உண்டு. அவர்களிடம் பெண்களுக்குரிய நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு என்னும் குணங்களே யில்லாதொழிகின்றன.

ஆகையால் இவ்விதக் குற்றம் வாரதபடியும், நமது பிதுர்க்களுக்குத் துரோகம் செய்யாதவர்களா யிருக்கும்படியும், நமது குலத்துக்குத் தாழ்வான சொல் வாராதிருக்கும்படியும் பாலியத்தில் விதவையாளுலும், புஷ்பவதியான பின்பு விதவையாளுலும் விதவா விவாகம் நடத்துவதை அகற்ற வேண்டுமென்பதும், அவ்விதவா விவாகம் கற்புடையதல்ல வென்பதும் அறிவில் சிறந்தோர்களாகிய முதியோர்களின் கொள்கை.

உண்மையை ஆராயுமிடத்து உத்தமம், மத்திமம், அதமம் என்று பகுக்கப்பட்டிருக்கும் விவாக முறையில் மத்திம விவாகத்தை அனுசரித்து நடத்தும்படியாயும், விதவா விவாகத்தை வேரறக் களைந்து விடும்படியாயும் எனது அன்பார்ந்த நண்பர்களை வேண்டிக்கொள்வதோடும் எல்லாம் வல்ல பரம்பொருளையும் பிரார்த்திக்கிறேன்.

E. கிருஷ்ணன், டிராயிங்மாஸ்டர், கலகாட்.

---

குறிப்பு:—கற்பரசிகளின் மகிமை அளவு கடந்தது. நம் நாட்டில் அத்தகைய கற்பரசிகள் இருந்தார்களென்பதில் சற்றும் ஐயமின்ருேம். யாவற்றிற்கும் மனமே பிரதான காரணமாதலின் தாய் தந்தையர் தன்னை யாருக்கு மணம் செய்து கொடுப்பதாகச் சம்மதித்தார்களோ, அது முதல் அவனையே ஒரு பெண் கவளுகக் கருதிவிடுவது உத்தம நெறியேயாகும். ஆயினும் கலிகாலபேதத்தால் மிக்க மாறுதல் தோன்றியிருக்கக்காணலாம். பாலியத்தில் விதவையாளுலும் மறு விவாகம் செய்யலாகாதென்பதை விட யுகதர்மத்தை யனுசரித்து பாலிய விவாகத்தை நிறுத்திவிடுவதே சிறந்ததாகும். பத்திரிகாசிரியர்.

---

## கைவல்ய நவநீத வசனம்.

(388-ம் பக்கத் தொடர்ச்சி.)

[ஈசுரசிருஷ்டி எப்போதும் பொதுவாகவேயுள்ளது. சீவசிருஷ்டியே அவற்றில் பலவித பேதங்களைக் கற்பிப்பது. திருட்டாந்தமாக ஒரு ஸ்திரீயை எடுத்துக் கொள்வோம். தேக அமைப்பில் ஸ்திரீயென்பது ஒரே தன்மையாக விருக்கிறது. அதாவது எல்லா ஸ்திரீகளும் ஒரேவித தேக அமைப்புடையவர்கள். ஆனால் சீவன் தனது புத்திவிருத்தியினா லுண்டான கற்பனையால் அந்த ஒரு ஸ்திரீயே தன் தந்தைக்குப் புத்திரியாகவும், பாட்டனுக்குப் பேத்தியாகவும், உடன் பிறந்தார்க்குச் சகோதரியாகவும், கணவனுக்கு மனைவியாகவும், மாமனார் மாமியாருக்கு மருகியாகவும், புத்திரர்க்குத் தாயாகவும், பேரப்பிள்ளைகளுக்குப் பாட்டியாகவும் இருக்கிறாள்.

ஆகையால் ஈசுர சிருஷ்டி எப்போதும் முத்திக்குச் சாதனமானதெனவும், ஜீவசிருட்டி முத்தியை யடைவதற்கும், முத்தியடையாது இப் பவசாகரத்தி லுழன்றுகொண்டு கிடப்பதற்கும், இரண்டிற்கும் ஏதுவாக விருக்குமென்றும் உணரவேண்டும். அது சீவன் எத்தகைய வழியில் முயற்சி செய்கிறானோ அதற்குத் தக்கதாக விருக்கிறது.]

(குரு பின்னும் ஆசை முதலியவை சீவ சிருஷ்டியே யென்பதைப் பற்றிச் சுருதிப் பொருளை விளக்கிக்காட்டுகிறார்.)

தரு:—" அச்சுவத்தம் (அரசமரம்) என்ற ஒரு விருட்சமுண்டு. அதில் இரண்டு பக்ஷிகள் சஞ்சரிக்கும். அவற்றில் ஒருபட்சி அம் மரத்திலுள்ள கனிகளை நன்றாயிருக்கிறது நன்றாயிருக்கிறது என்று விருப்பத்தோடு புசிக்கும். மற்றொருபட்சி அக்கனிகளைப் புசியாது." என்ற திருட்டாந்தரப்படி முண்டகோ உபநிடதம் சீவனையும் ஈசுவரனையும் பிரித்துக் கூறியிருக்கிறது. இதை நீ யுணர்வாயாக.

[சரீரமாகிய இவ்விருக்ஷத்தில் சீவனென்கிற ஒருபட்சியும் சீவசாட்சியாகிய ஈசுரனென்ற ஒருபட்சியும் இருக்கின்றன. இவற்றில் சீவன் என்கிறது அஞ்ஞானத்தால் சுகதுக்கரூபமான இஷ்டபலன்களைப் புசிக்கிறான். சர்வஞ்ஞனும், சத்துவகுண மாயையினுபாதி புடையவனுமான ஈசுவரன் அவற்றைப் புசிப்பதில்லை.]

(குரு இன்னும் சீவச்செயல்களை ஈசுரச்செயலென்று கூறுவோர் அதோகதியடைவார்கள் என்று கூறுகிறார்.)

"சீடனே! இந்தச்சீவனால் நேரிடும் ஆசை கோபம் முதலிய யாவும் இந்தச் சீவன் செயலே என்று கூறாது கடவுளின் செய்கையென்று கூறுவோர் அதோகதி யடைவார்கள். இந்தச் சீவனால் நேரிடும் கிருத்தியங்களனைத்தும் இவன்செயலே யன்றி அத்தேவன் செயலல்லவென்றுணரும் விவேகிகளே பரிசுத்தமான மோட்சவீட்டை யடைவார்கள்.

[காமக்குரோதாதி தீயகுணங்களைத் தன்செயல் என்று கருதாத சீவன் மேலுமேலும் அவற்றைச் செய்து பெரும்பாபத்தைத் தேடிக்கொள்வான். அந்தத் தீயகுணங்கள் தன்னுடைய குணங்களே என்று உணர்ந்தவன்

அதனல் நேரிடக்கூடிய தீயபலன்களுக்கு அஞ்சி அக்குணங்களை யொழிக்க முயன்று ஞானத்தைப் பெற்று முத்திவீட்டையடைவான்.]

(ஈசுவரனிடத்து பாரபட்சம் கூடுமோவெனச் சீடன் வினவுகிறன்)

சீடன்:—"ஞானமே திருமேனியாகக் கொண்டருளிய ஆசாரியரே! நல்லவர்கள் கெட்டவர்கள் யாவர்க்கும் ஆண்டவனுகிய ஈசுவரன் பொதுவானவரன்றே? அப்படி யிருக்கச் சிலரைச் சந்தோஷ மனுபவிக்கும்படி க்ஷேமமாக வாழ்வித்தலும், சிலரைத் துன்பமனுபவிக்கச் செய்வித்தலும் ஏன்?" என்றான்.

குரு:—ஒரு தந்தையானவன் தன்புத்திரர் அனைவரிடத்தும் ஒரே அளவான அன்புடையவனுயினும், நற்குணம் நன்னடக்கை யுடைய பிள்ளையைச் சீராட்டிப் புகழ்வதும், கெட்ட நடக்கையையுடைய புத்திரனைக் கண்டித்துத் தண்டிப்பதும் செய்கிறனன்றே? அதுபோல் ஈசனும் தன்னல் அருளிச் செய்யப்பட்ட சாத்திரங்களில் விதித்தவற்றைச் செய்து விலக்கியவற்றைச் செய்யா தொழித்தவர்களுக்கு இன்பத்தை யளிக்கிறன்; விலக்கிய தீநெறியில் செல்வோர்களைத தண்டிக்கிறன். ஆன்மாக்கள் நல்வழிப்படும் பொருட்டுச் செய்யும் தண்டனையும் கருணையாற் செய்வதேயன்றி வேறில்லை யென்றறிவாயாக.

[கருணையே யுருவமாகவுடைய பரமேட்டி எல்லாச் சீவர்களிடமும் ஒரேவிதமான பட்சமேயுடையவர். குற்றம் செய்த சீவர்களைத் தண்டிப்பதும் அவர்கள் நற்கதியடைய வேணுமென்ற கருணையாற் செய்வதேயாகும்.]

அன்புள்ள புத்திரனே! ஈசன் யாவரிடத்தும் சமதிருஷ்டி யுடையவனென்பதற்கு இன்னெரு திருஷ்டாந்தம் கூறுகிறேம். கற்பகவிருக்ஷம் பாரபட்சமின்றித் தன்னை யடைந்தவர் வறுமையை யொழிக்கின்றது. அதுபோலவே அக்கினி தன்னை யடைந்தவர் குளிரையும், ஜலம் தன்னை யடைந்தவர் தாகத்தையும் தவிர்த்து இரட்சிக்கின்றன. இவற்றைப் போலவே ஈசுவரனும தன்னை வழிபடுவோர்க்கு அருள் புரிகிறன். தன்னை நீங்குவோர்ககு அருள் செய்யான். இது யார் குற்றமென்று ஆராய்ந்து பார். இது சீவாகளின் குற்றமேயாகும்.

[இஃது நன்கு விளங்குமாறு பட்டினத்தடிகள் அருளிய கீழ்க்கண்ட பா உய்த்துணரற்பாலது:—

"பொருதிடங் கொண்ட பொன்னி புரக்கு
மருதிடங் கொண்ட மருத வாண
நின்னது குற்ற முளதோ வின்னினைந்
தெண்ணருங் கோடி யிடர்ப்பகை களைந்து
கண்ணுறு சிற்றத்துக் காலனை வதையா
இறப்பையும் பிறப்பையு மிகழ்ந்து சிறப்பொடு
தேவ ராவின் கன்றெனத் திரியாப்
பாவிக டமதே பாவம் யாதெனின்
முறியற் பெறுகசன் முப்பழங் கலந்த

வறுசுவை யடிசி லட்டினி திருப்பப்
புசியா தொருவன் பசியால் வருந்துத
லயினியின் குற்ற மன்று வெயிலின் வைத
தாற்றிய தெண்ணீர் நாற்றமிட் டிருப்ப
மடாஅ ஒருவன் விடாஅ வேட்கை
தெண்ணீர்க் குற்ற மன்றுகண் ணகன்று
தேன்றுளி சிதறிப் பூந்துணர் துறுமி
வாலுகங் கிடந்த சோலை கிடப்ப
வெள்ளிடை வெயிலில் புள்ளிவெயர் பொடிப்ப
வடிபெயர்த் திடுவா னொருவ
னெடிது வருந்துத னிழற்றீங் கன்றே"]

மகனே! நாம் ஒன்று கூறுதும் கேட்பாயாக. மனிதர்களுக்குப் பிரம்மானந்தப் பேற்றையளித்தற் கென்றே ஈசுவரன் வேதத்தை யருளியிருக்கிறார். யார் மோக்ஷமடைய வேண்டுமென்ற வைராக்கியத்தோடு முயன்று மேற்கண்ட வேதத்தில் கூறப்பட்ட வழியில் நடந்து, பிரம்ம நிஷ்டர்களாகிய பெரியோர்களின் சகவாசத்திலிருந்து, காமக்குரோதாதி மலினவாசனைகளை யொழித்து, சமதமாதி சாதனைகளை யடைந்து, நித்தியாநித்திய விவேகம் உடையவர்களாய், அவிவேகத்தா லுண்டான மாயையாகிய பேதபுத்தியை யொழித்து, ஓர் நிலையில் நின்று ஞானத்தை யடைகிறார்களோ, அவர்கள் பிறப்பிறப்பாகிய பவசாகரத்தைக் கடந்து முத்தியங்கரை சேர்வார்கள். இது நிச்சயம் என்றறிவாயாக.

சீடன்:—சுவாமிகளே! அத்தகைய ஞானத்தை எவ்வாறடையலாகு மென்பதைத் தயைபுரிந்து அருளப் பிரார்த்திக்கிறேன்.

குரு:—சீடனே! இந்த ஞானம் எவவாறு வருமெனின் இடைவிடாமல் விசாரம் செய்வதால் வரும். விசாரமாவது என்னெனின், "இந்தத் தேகேந்திரிய கரணங்களில் நான் என்று இருப்பது எது? இவற்றில் சித்தாக உள்ளது எது? இச்சித்தும் ஜடமும் ஒன்றாகப் பொருந்தும் பந்தமாவது யாது? மோக்ஷமென்பதுதா னென்ன?" என்று சதா ஆராய்ச்சி செய்தலே விசாரம் என்று ஆன்றோர் கூறுவர்.

[வாசிட்டத்தில் வசிட்டர், ஸ்ரீ இராமபிரானை நோக்கி,

"கெடாத சிற்கண் ணுனீதான் கிளர்மே லவர்க ளுடனேதான்
விடாதிவ் வுலகே தியாமாரென் றுரைக்க மெல்ல விசாரிப்பாய்
தடாதுட் பொருடேர் வித்தைக்கு விசாரந் தானே தனிஞானம்
கடாவி யறியத் தக்கத்திற் காணும் பாலின் மதுரம்போல்"

என்று விசாரத்தைப்பற்றி அருளியுள்ளது கவனிக்கத்தக்கது.

சீடன்:—சுவாமிகளே! கடந்த ஜன்மங்களில் செய்துள்ள புண்ணிய கர்மங்களின் பயனாக ஞானம் சித்திக்குமல்லவா? அப்படி யிருக்க இப்போது விசாரம் செய்யவேண்டுவ தேனோ அடியேற்கு விளங்கவில்லை. அதை யருள்செய்யப் பிரார்த்திக்கிறேன்.

குரு:— நாம் செய்யும் புண்ணிய கர்மங்களை ஈசுரார்ப்பணமாகச் செய்தால், அவற்றின் அசுத்தம் நீங்கிச் சுத்தமாம்; பிறகு சுத்தமான மனம் ஆன்ம அனான்ம விசாரஞ்செய்து ஞானத்தை யடையும்.

[நாம் செய்யும் சத்கருமங்களை அவற்றின் பலனை யிச்சிக்காமல் ஈசுரார்ப் பணமாகச்செய்தால், அவற்றின் பயனாகச் சித்த சுத்தியுண்டாகும். அதன் மேல் மனம் நித்தியம் எது அநித்தியம் எது, நாம் யார் என்பனவற்றை விசாரித்து ஞானத்தையடையும். நிஷ்காம கர்மம் சித்த சுத்தியைத் தரு மேயன்றி விசாரத்தைப்போல் நேரே ஞானத்தை யளிக்கவல்ல தல்ல. ஆகையால் நிஷ்காம கர்மத்தால் சித்தசுத்தி வந்தபின் விசாரம் செய்ய வேண்டும் எனபதாம்.]

(சீடன் பின்னும் சங்கித்தல்)

சீடன்:—தேசிகோத்தமரே! பக்தி, வைராக்கியம், சுவர்க்கபோகம், அணிமாதி சித்திகள் முதலியவற்றை யெல்லாம் தரவல்ல நிஷ்காம கர்மங்கள், தன்னைப் பிரம்மமாக அறியாத அஞ்ஞானத்தை மட்டும் நீக்கத்தகுந்த புத்தியை யளித்தல் அருமையோ? அதற்கு விசாரம் வேண்டு மென்பதென்னையோ அருளல் வேண்டும்.

குரு:—சீடனே! தன் உண்மையுருவை மாற்றி மாறுவேட மணிந்துள்ள ஒருவனைக் கண்டறிய வேண்டுமாயின், மறைந்திருக்கும் அவன் குணங்கள், ஒழுக்கங்கள், அடையாளங்கள் முதலியவற்றை உற்று ணர்ந்து இவன் இன்னவன் என்று அறியவேணடும். அப்படிக்கின்றி வெகுதூரம் ஓடுவதாலும், குதிப்பதாலும், தலைகீழ் கால்மேலாக நிற்பதாலும், உயர்ந்த கமபததி னுச்சியிலேறி யாடுவதாலும், இன் னும் இத்தகைய பல கருமங்களைச் செய்வதாலும், வேடமாறியிருக் கும் அவன் உண்மையை யறியமுடியாது. அதுபோல்,

சச்சிதானந்த சொரூபமாகிய பரப்பிரம்மம் பஞ்சகோசாதிகளோடு கூடிச் சீவனாக மாறுவேடமணிந் திருக்கிறது. அதையறிய வேண்டின் ஞானத்தைப பெறவேண்டும். பிரம்மத்தை அதற்குரிய இலக்கணங்களா லறிவிக்கும் வேதங்களாற் பிரதிபாதிக்கப்பட்ட அத்தகைய ஞானம், விசா ரத்தால் மட்டுமே வருமன்றிப் பல சாத்திரங்களைக் கற்பதாலும், அந்தா னங்கள், ஜபதபங்கள், மந்திரங்கள், யாகங்கள் ஆகிய வேறென்ன செய்வ தாலும், தன்னைத்தா னறிவதாகிய அந்தஞானம் வராது.

“நாமார் நமக்குப் பதியா ரெனவரு ஞானங்களே
மாமாயை கன்ம மலத்திரள் மாற்றிடும்......” என்று வள்ளலார் அருளியபடி விசாரணையால்தான் ஞானம்வரும்.

விசாரணையால் அடையவேண்டிய ஞானம், தன்னைத்தான் அறிவதே யாகும்.

“தன்னை யறிவ தறிவா மஃதன்றிப்
பின்னை யறிவது பேயறி வாமே”
“தன்னை யறிந்து சிவனுடன் றானாக
மன்னு மலங்குண மாளும் பிறப்பும்”
“தன்னை யறியத் தனக்கொரு கேடில்லை
தன்னை யறியாமற் றானே கெடுகின்றான்” (திருமந்திரம்)

(ஞானத்தால்தான் அஞ்ஞானம் ஒழியு மென்பதைப்பற்றிச் சீடன் திருட்டாந்தத்தோடு வினவுகிறான்.)

சீடன்:—"சுவாமி! கண்ணாடியில் இருக்கும் அசுத்தத்தைக் கையால் துடைத்தால்தான் ஒழிகிறதேயன்றிப் புத்தியால் ஒழித்தவர்களை காண்கிலேன். அதுபோல் களங்கமாகிய அஞ்ஞானமும் சற்கருமத்தால் நீங்காமல், அறிவால் உணரும் ஞானததால் எப்படி நீங்குமோ? அதை விளக்கியருளப் பிரார்த்திக்கிறேன்" என்றான்.

குரு:—கண்ணாடியில் உள்ள அழுக்கு உண்மையானது. ஸ்படிகக்கல்லில் கருநிறம் தோன்றுவது உண்மையல்ல, ஆரோபம். ஆகையால் கண்ணாடியிலுள்ள அழுக்கை யெடுக்கக் கையால் தொழில் செய்ய வேண்டும். ஸ்படிகக்கல்லில் தோன்றும் கருநிறம் பொய்யென்றறிய மனம் மட்டுமே போதும்.

அதுபோல் தாஷ்டாந்தத்திலும், சச்சிதானந்த சொரூபத்தில் தோன்றியிருக்கும் அசத்து, சடம் துக்கமாகிய பிரபஞ்சாதிகளியாவும் கிளிஞ்சிலில் வெள்ளி தோன்றுவதுபோல் மாயையால் ஆரோபமாகத் தோன்றியதன்றி சத்தியமானவையன்று. அஞ்ஞானத்தைக் கருமங்கள் பகைத்து நாசம் செய்யாமல் தமக்கு உறவாக்கிகொள்ளும். பரிசுத்தமான ஞானமே கருமத்தையும் அஞ்ஞானத்தையும் சுட்டெரிக்கவல்ல அக்னியாகும். (தொடரும்)

சீடன்.

---

# ஓர் வேண்டுகோள்

சகோதரர்காள்! நாம் தற்சமயம் மிகுந்த பரிதாபகரமான நிலைமையிலிருக்கிறோம் என்பது யாவர்களும் அறிநத விஷயம். எனன செய்யலாம்! கடவுளுக்கு நம்மேல் பிரீதியில்லாமல் போய்விட்டதா? அல்லது மானிடர்களுக்கு ஏற்கனவே அமயப்பெற்ற பகுததறிவு நமமவர்களுக்கும் இல்லாமல் போய்விட்டதா? இல்லையேல், கடவுள் ஒருபோதும் பக்ஷபாதியல்ல; கைக்கூலிக்காரனுமல்ல. அவர் எண்பத்து நான்குலக்ஷம் ஜீவராசிகளையும் படைத்து, அவைகளுக்கு வேண்டும் அவயவாதிகளையும் கொடுத்து, விசேடமாக மானிடர்களுக்கு நன்மைதீமை, குணாகுணங்கள், இவை முதலியவற்றை நன்கறியும்படியாக அரிதாகிய பகுத்தறிவையும் தந்திருக்கும்போது, அதின்படி நடந்துகொள்ள வேண்டியது நம்மவர் கடமையன்றோ?

உவமையாக, காருண்ணிய கவர்மெண்டாரால் அதிகாரம் வகித்த ஒரு உத்தியோகஸ்தன் தனக்கு அதிகாரமில்லாத ஒரு வேலையைச்செய்ததி நிமித்தம் உத்தியோகத்தி லிருந்து நீக்கப்படுவானாயின் அதற்குக் கடவுள் குற்றவாளியா? அப்படிச் சொலவது அறிவீனமன்றோ. அவன், நமக்கு அதிகாரமில்லாத ஓர்வேலையைச்செயகிறோம்என்பது தெரிந்து மனோசாக்ஷியென்னும் கடவுளை மீறி நடந்ததால் உததியோகத்தி லிருநது தளளப்படுகிறான். இதற்குக்கடவுளா குற்றவாளி? இத்தகமைபோல நம்மவருள் சிலர் மனோசாக்ஷிக்கு முற்றிலும் விரோதமாகவே நடந்துவருகிறார்கள.

நேயர்காள்! யானை தன் துதிக்கையால் மண்ணைவாரித் தலைமேல் போட்டுக் கொள்வதுபோல், சிலர் தாமாகவே தமது கௌரவத்தையும், யோக்கியதையும் இழந்து கொள்ளுகிறார்கள். இவர்கள் மதி என்னே! என்னே! ஈசனே இவர்களை நல்வழியில் கொண்டுவா வேண்டும்.

சகோதர சகோதரிகாள்! இப்போது இரண்டொரு தினங்களுக்கு முன் இவ்வூரில் நடந்த ஓர் சங்கதி ஞாபகத்துக் கெட்டுகின்றது, அதாவது, நமது "ஆனந்தபோதினியை" அன்போடு வாசித்துக்கொண்டிருந்த ஒரு சிநேகிதரிடம் சாமான்னியமாய் இங்கிலீஷ் படித்த ஒருவர், என்ன மாஸ்டர் என்ன புஸ்தகம் வாசிக்கிறீர் என்று வினவ, அதற்குச் சிநேகிதர், ஆனந்த போதினியென்னும் மாதாந்த தமிழ்ச்சஞ்சிகை என்று சொல்லி முடிவதற்குள், அவர் (useless book) யூஸ்லெஸ்புக என்று கூறுவதைக் கேட்ட இன்னொரு சிநேகிதர், ஸார்! அரியபெரிய விஷயங்களடங்கிய புஸ்தகத்தைமுன்பின்யோசனை பண்ணுது இலேசாகஆக்ஷேபித்துவிடக் கூடாது என்றார். அதற்கு மற்றவர் ஓகோ, நானறிவேன் மணி (Money) உண்டாக்குவதற்கு ஒவ்வொருவரும் கைக்கொண்டிருக்கிற தொழில்களில் இதுவு மொன்று என்றார். இவ்விதம் சம்பாஷணை நடந்துகொண்டிருக்கையில் சிறியேனாகிய யானும் அவ்விடம் சென்றேன்; சம்பாஷணையும நிறுத்தப்பட்டது.

செந்தமிழ் நேயர்காள! என்ன பரிதாபம் பாருங்கள்! இவ்விதம், (useless) பயனற்றதுஎன்றும், பணம் பறிப்பதற்காகச் செய்துவரும் தொழில்களுள் ஒன்றென்றும கூறியவர் தமிழ்மாதாவின் புத்திரர்களில் ஒருவராகிய தமிழரா என்பது உண்மையானல் எவர்கள்தாம் வியாகூல மடையார்கள். தன்னைப் பத்துமாதமும் சுமந்து ஈன்றெடுத்து எவ்வளவோ கூறுதற்கரிய கஷ்டங்களை அனுபவித்து வளர்த்த தாயை, தன் யௌவன பிராயத்தில் பழிப்பதென்றால், கடவுள் பிரீதிக்கு ஆளாவாரா! இப்படியும் புத்திமான்களிருந்தால் நாம் எக்காலத்தில் முன்னேற்ற மடையப்போகிறோம்.

கடைசியாகத் தலைவாசகத்தின்படி என தன்பார்ந்த வேண்டுகோள் என்னவென்றால், நம்மவர்கள் ஒவ்வொருவரும் மனோசாக்ஷிக்கு விரோதமாக நடந்து கொள்ளாம லிருக்கத் தம்மாலியன்றமட்டிலும் முயற்சி எடுக்க வேணுமாய்க் கேட்டுக் கொள்வதுடன், மனதாரக்கெட்ட எண்ணத்துடன் மனோசாக்ஷியை வஞ்சிக்கிற தற்கால நாகரீக மகான்கள் மனதை நன்மார்க்கத்துக்குக் கொண்டு வரும்படியாக எங்கணும் நிறைந்திருக்கும் தேஜோன்மய சொரூபியை என்னொருகரம் கூப்பிப் பிரார்த்திக்கிறேன். இதுவே எனது தற்சமயமுள்ள சிறுவேண்டுகோள். சுபம்.

R. L. சுப்ரமண்யம் பிள்ளை,
பத்மநாபபுரம்.

---

குறிப்பு:—மேற்கண்ட விஷயத்தோடு பூந்தோட்டத்தி லிருக்கும் நமது சந்தாநேயர் ம-ா-ா-ஸ்ரீ சொக்கலிங்க முதலியார் என்பவர் இம் மாத சஞ்சிகை தபாலாபீஸில பலர்க்கு வந்திருந்ததைக் கண்ணுற்ற ஒருவர் "இந்த அல்ப பத்திரிகையை யெல்லோரும் வரவழைக்கிறீர்களே" என்று கூறியதாகவும், அதற்கு நண்பர் இதையா அல்பபத்திரிகை யென்கிறீர் என்று கேட்டதற்கு அம்மனிதர், இதில் விஷயதானம் செய்கிறவர்களெல்லாம் மிகவும் கீழ்மையானவர்க ளென்றும், பத்திரிகாசிரியர்க்கு ஒன்றும் தெரியாதென்றும் கூறினதாகவும் கூறி நம் நாட்டாரின் நிலைமையைப் பற்றி மிக்க துயரத்தோடு வரைந்துள்ளார்.

இவர்கள், நமது சஞ்சிகையையும், நம்மையும் இழிவுபடுத்திக் கூறியதைப்பற்றி நாம் வருந்தவில்லை. ஏனெனில், மகாசக்கிரவர்த்திகளும் சீமான்

களும்கூட முத்தையெவ்வளவோ சிலாகித்து மிக்க பணத்தைக்கொடுத்து வாங்கி யணிந்து கொண்டாலும், அதே முத்தை ஒரு பன்றி சாதாரணப் பருக்கைக் கல்லாகவே மதிக்குமன்றோ? ஆனால் நமது நாட்டிலிருக்கும் இத்தகைய அறியாமை யின்னும் ஒழிந்தபாடில்லையே யென்பதற்குத் தான் நாம் விசனிக்கிறோம். ஒரு தேசத்தின் முன்னேற்றத்திற்கு அவசியமானவற்றுள் பத்திரிகைகளும் முக்கியமான ஒன்றென்பதும், அவற்றால் நாம் அடையக்கூடிய நன்மைகள் இத்தகையவை யென்பதும் இப்போது நம் நாட்டாரில் பெரும்பாலார் உணர்ந்து அவைகளை வாசிப்பதில் சிரத்தையெடுத்துக் கொள்கிறார்கள். அப்படியிருந்தும் இன்னும், பலர் தாங்கள் மடமையில் அழுந்திக் கிடப்பதோடு மற்றவர்களையும் கெடுக்கும் அவிவேகிகளாக விருக்கிறார்கள். கடவுள் சிந்தனையே யில்லாத சில சோம்பேறி மூடர்கள், யாரேனும் கோயிலுக்குச் சென்றால் அவர்களை நோக்கி "கோயிலிலென்ன இருக்கிறது, எல்லாம் நமக்குள் இருக்கிறது" என்று கடவுளை மெய்யாகவே உள்ளத்தில் கண்டவர்கள்போல் போலி ஞானம் பேசுகிறார்கள். அதைப்போலவே சிலர் பத்திரிகைகளினாலடையத்தக்க பயனையணுவும் அறிவின்றி "அவன் பணம் சம்பாதிக்கப் பத்திரிகை போடுகிறான். நாமேன் வீணாகக் காசுகொடுத்து அதை வாங்கிப் படிக்கவேண்டும்" என்று கூறிக்கொண்டு மிருகங்களுக்குச் சமானமாய் உண்பதும் உறங்குவதுமட்டுமே தங்கள் வேலையென்று திரிகின்றார்கள். அந்தோ! இனியேனும் கருணாநிதியாகிய பரமன் புண்ணிய பூமியாகிய நம் தாய்நாட்டின் க்ஷேமத்தைக்கருதி இத்தகையோர்க்கு நல்லறிவளித்து அவர்கள் அறியாமை நீங்கி முன்னேற்ற மடையுமாறு அருள் புரிய வேண்டுமாகப் பிரார்த்திப்போமாக. ஓம் தத் ஸத்.

பத்திரிகாசிரியர்.

---

## இல்லறம் விக்ரகாராதனை

### மறு உலகம்

(375-வது பக்கத் தொடர்ச்சி.)

உஷக்கால முதலாகப்பட்ட இந்த நித்தியவிதிகளை வழுவாமல் அனுஷ்டித்துப் பரிசுத்தமான சித்தத்தை யுடையவர்கள் திவ்வியசரீரம் பெற்று மேலுலகங்களிற் சென்று அங்கங்குள்ள போகங்களை யனுபவித்து, மீண்டும் பூலோகத்தில் உயர்ந்த வருணத்தில, உயர்ந்த குலத்தில் ஜனித்துச் சதாசார சீலர்களாய் ஒழுகி அந்தத்தில் மோட்சத்தையும் பெறுவார்கள். இவ்விதிகளுக்கு மாறாக நடந்து தம்மனம் போனபடி ஒழுகுகிறவர்கள் யாதனாசரீரத்தைப் பெற்று எமனுடைய ஆக்கினையாலே இரௌரவ கும்பிபாகாதி நரகங்களையடைந்து நெடுங்காலம் துன்பமுற்றுப் பிறகுபாவசேஷத்தால் ஈன ஜந்துக்களாகவும், ஈனகுலத்தில் தரித்திரர்களாகவும், பலவியாதிகளை யுடையவர்களாகவும் பிறந்துவருந்தி மேலும்மேலும் பாவங்களைச்செய்து நரகலோகந்தோறு மலைந்து துன்பமுறுவார்கள். ஆதலால் பாவநெறியை விட்டுவிலகி, நன்னெறியி லொழுகி மகிமைபெறுவதே சற்குணமாந்தர்க்குத் தக்கது. இந்த நன்னெறிபற்றி யொழுகுகிறவர்கள் ஆஸ்திக புத்தி

யுடையவர்க ளாகவும், தெய்வபக்தி யுள்ளவர்க ளாகவும், பெரியோரை வணங்குகிறவர்களாகவும், மாதாபிதாக்களை வழிபடுகிறவர்க ளாகவும், குரு சேவை செய்கிறவர்களாகவும், பதிவிரதையான மனைவியினிடத்தில் உள்ளன் புடையவர்களாகவும், ஜீவ இம்சை செய்யாதவர்களாகவும், சகோதர வாஞ்சை யுடையவர்களாகவும், சகல பிராணிகளிடத்திலும் இரக்கமுள்ளவர்களாகவும், பரோபகார சிந்தை யுடையவர்களாகவும், நித்தியா நித்திய வஸ்துக்களின் தன்மையை யுணர்ந்தவர்களாகவும், சொர்க்கநரகாதிபுவன இரகசியங்களை வேதங்களாலும் பெரியோர்களாலும் தெரிந்து கொண்டவர்களாகவும், கோபம், பொறாமை, பொய், பகை, வஞ்சகம், காமமாதி துர்க்குணங்களை யொழித்தவர்களாகவும், இவற்றுக்கு மாறான சற்குணங்களை யுடையவர்களாகவு மிருக்கவேண்டும். இவர்கள் தேகாந்தத்தில் புண்ணிய லோகங்களையே யடைவார்கள். இவைகளை யெல்லாம் நமது பூர்வ பிதாக்கள் தபோமகிமையாலும், யோகமகிமையாலும் சுயானுபவமாகக் கண்டறிந்து நமக்குபகரித் திருக்கின்றார்கள். தமது யோகவல்லமையால் பல வுலகங்களையும் நேராகப்பார்த்து அவற்றின் உண்மைகளை யுணர்ந்து வெளிப்படுத்தினார்கள். ஆதலால் நாம் அவ்வாறொழுகுவதே தகுதி. அப்படியாயின் அவ்வுலகங்கள் எங்குள்ளன? சரீரத்தை விட்ட ஜீவாத்மா அவ்வுலகங்களை யெவ்வாறடையும்? அவ்வுலகங்களுக்குச் செல்லும் மார்க்கம் யாது? என்று பல கேள்விகள் நிகழலாம். அது சிறிது கூறுவாம்.

ஆகாயவிரிவில் காணப்படுகிற நட்சத்திரங்க ளெல்லாம் உலகங்களே. அவற்றில் பல் வண்டங்களிலும் ஜீவாத்மாக்கள் சஞ்சரிக்கின்றன. ஆனால் மனிதர்களுடைய சொரூபத்தைப்போல அவர்களுக்கும் உருவமிருக்குமென்று துணிந்துகூற முடியாது.

தேவர்களுட் சிலர்க்கு நான்கு புயங்களுண்டென்றும், அவர்கள் வடிவம் சூரியனைப்போலக் காந்தியுடையதாயிருக்கு மென்றும், நிருதர்களிற் பலர் பற்பல கோரரூப முடையவர்களென்றும் மனித சொரூபத்துக்கு மாறாகக் கூறப்படுதலா லெனக. அர்ஜுனன் தேவலோகம் சென்றபோது அவனை நோக்கிக் "குந்தி குமாரனே! புண்ணிய பாரதமக்கள் வசிக்கும் இவ்வுலகங்கள்தான் பூலோகத்திலிருந்தபோது நமக்கு நட்சத்திரங்களாகக் காணப்பட்டன வென்று இந்திர சாரதியாகிய மாதலி கூறினதாகப் பாரதங் கூறுகின்றது. அன்றியும் "பூலோகத்தி லிருக்கும்போது நமக்கு நட்சத்திர ரூபமாகக் காணப்பட்ட அநேக உலகங்களை அர்ஜுனன் பார்த்தான்" என்றும், "அவைகள் பூமிக்கு வெகு தூரத்திலிருக்கின்றமையால் மிகச் சிறியனவாயும், தீபங்களைப்போலவும் காணப்படுகின்றன. இப்போது அவைகள் மிகப் பெரியனவாயும், தமது சுயப்பிரகாசத்தால் விளங்குகின்றனவாயும் காணப்பட்டன" என்றுங் கூறப்பட்டுள்ளது. இவ்வாறே, காசி காண்டத்திலும் "சிவசன்மா என்பவர் விஷ்ணு சொரூபத்தை யடைந்து, வைகுண்டம் செல்லும்போது எமலோகம், தேவலோகம், சூரியலோகம், அக்கினிலோகம், நிருதியுலகம், வருணனுலகம், வாயுலோகம், குபேரலோகம், ஈசானனுலகம், சந்திர னுலகம், தாரகையுலகம், புதனுலகம், சுக்கிர னுலகம், செவ்வாய், வியாழம், சனி யுலகங்கள் சத்தரிஷி யுலகங்களைப்பார்த்து மகிழ்ந்து சென்றார்" என்று கூறப்பட்டுள்ளது.

இவ்வாறு பல நூல்களுங் கூறுகின்றன. ஆதலால் ஆகாயத்தில் நட்சத்திர வடிவமாகக் காணப்படுகிறவைகளும், கிரகங்களென்று கூறப்படுகிறவைகளும் உலகங்களேயாம். இப்பொழுது கூறிய இவையெல்லாம் புண்ணியர்கள் அடையும்போது பூமிகளேயாம் அவ்வுலகங்கள் வெய்யில், நிலவில்லாமலும் சுயம்பிரகாசமுடையவைகளென்றும், பாவத்தினின்றும் நீங்கிய பரிசுத்த புண்ணியாத்மாக்களே வசிப்பதால் அவ்விடத்தில் பசிதாகம் முதலியவும், வியாதிகளு மில்லை யெனவும், அங்கு அனுபவிப்பது முற்றும் இன்பமே யென்றும் உண்மை நூல்கள் கூறுகின்றன.

சம்பாதித்த பொருளைச் சற்பாத்திரத்தில் தானம் கொடுத்தவரும், ஒருவருக்குந் துன்பஞ் செய்யாதவர்களும், கிஹ்ய லோகத்தில் வசிப்பார்கள். அரிய விரதஞ் செய்தவர்கள், யாழினால் தேவதைகளின் புகழைப் பாடினவர்கள், கீதங்களைப்பாடி யதனாற் சம்பாதித்த பொருள்களைத் தருமத்திற் செலவழித்தவர்களாய்க் கந்தர்வராய்க் கந்தர்வ லோகத்தில் வசிப்பார்கள். ஒரு பயனைக் கருதித் தேவ ராராதனை செய்வோரும், வித்தியார்த்திகளுக்கு அன்னம், ஆடை முதலிய வளித்துப் பொருளை விரும்பாமற் கல்வி கற்பித்தவர்களும் வித்தியாதர வுலகத்தில் வசிப்பார்கள். அந்தராதித்திய வித்தையால் சூரியோபாசனை செய்பவரும், காயத்திரியை முறைப்படி ஜபிப்பவரும், காலை பகல் மாலை யாகிய மூன்று பொழுதும் முறைப்படி சூரியனுக்கு அர்க்கியங் கொடுப்பவரும், சூரிய கிரகணகாலத்தில் சற்பாத்திரத்தில் தானங்கொடுப்பவர்களும், ஓமம் தானம் ஜபம் இவைகளைத் தவறுமற் செய்கிறவர்களும் சூரிய லோகத்தை யடைவார்கள். போர்முகத்தில் பின்னிடையாமற் பொருது ஜீவனைவிட்ட வீரர்களும், வேள்வி செய்பவர், செய்விப்பவர், அசுவமேதஞ் செய்தவர், துலாபார தானஞ் செய்தவர், அளவில்லாத சொர்ணதானஞ் செய்தவர், தவம்புரிந்தவர்களும், நீதி தவராமல் அரசு செலுத்திப் பிரஜா பரிபாலனஞ் செய்த அரசர்களும், இந்திரன் வாழ்கின்ற சொர்க்கலோகத்தை யடைந்து வாழ்வார்கள். அக்கினிப்பிரவேசம் செய்த மாதரும், வேள்விகள் செய்த அந்தணரும், குளிர் நீங்கும்படி கம்பளம் சால்வை முதலிய தானஞ் செய்தவர்களும் அக்கினி யுலகத்தை யடைவார்கள். இழிகுலத்திற் பிறந்தும் அறநெறி தவறுமல் அந்தணரைப் பணிந்தொழுகுபவர் நிருதியுலகை யடைவார்கள். அந்தணர்க்குப் பூமிதானம் கொடுததவர், ஆறு குளங்களில் படித்துறை கட்டினோர், சிறைப்பட்டவர்களையும் விலங்கிட்டவர்களையும் விடுவித்தவர், குளம் கிணறு வெட்டினவர், தண்ணீர்ப்பந்தல் வைத்தவர் இவர்கள் வருணவுலகத்தை யடைவார்கள். திருமால் சேவடியை மெய்யன்போடு வழிபடுவோர் மஹலோகத்தில் வசிப்பார்கள். தவத்திற் சிறந்த பெரியோர்கள் தவலோகத்தில் வசிப்பார்கள். இந்தப் பல வுலகங்களிலும் புண்ணியம் புரிந்தோர் சென்று போகம்நுகர்ந்து வாழ்வார்களெனப் புராணங்களும், ஏனைய நூல்களும் கூறுதலால், புண்ணியம் புரிந்தோர் போக பூமிகளிற் சென்று வாழ்வார்கள் என்னும் நிச்சயமுண்டு.

இதுகாறும் எடுத்துக் கூறியவை நூல்களிற் கூறப்பட்டவைகளே. எதனுலெனில் அவ்வுலகங்களிற் சென்று அங்கங்குள்ள வற்புதங்களைக் கண்டு மீண்டுவந்துரைத்த மஹாத்மாக்கள் அநேகருளர். அவைகளெல்லாம் நூல்களிலேயே யமைந்து கிடக்கின்றன. சந்திரவம்சத்துக் [illegible]காசனுகிய

ஸம்வருணன் சூரியன் புத்திரியாகிய தபதியின்மேற் காதல்கொண்டான். அதனை யுணர்ந்த அவன் குருவாகிய வசிஷ்டர் சூரியலோகம் போய்ச் சூரியனைக்கண்டு பேசி யவன்புத்திரியை யழைத்துக்கொண்டு வந்து ஸம்வருணனுக்கு மணம்புரிவித்தார். அவ்விருவருக்கும் பிறந்த புத்திரனே குரு என்னும் பிரபல அரசன். அவன்பெயரை யனுசரித்து அவன் பின் சந்ததியார் குருகுலத்தார், அல்லது கௌரவர் என்னப் பட்டார்கள். பாண்டவனாகிய அர்ஜுனன் தேவலோகம்போய் ஐந்து வருஷம் வசித்து மீண்டும் பூலோகம் வந்தான் விசுவாமித்திரரும் வசிஷ்டரும் தேவலோகம் சென்று தேவராஜன் சந்நிதியில் சபதஞ் செய்துகொண்டு மீண்டு பூலோகம் வந்தார்கள். சேரசோழ பாண்டியர்கள் தேவலோகம் போய்த் தேவேந்திரனைத் தரிசித்து மீண்டு வந்தார்கள். சாநந்தகணேசர் நாகலோகம் போய் அங்கே நரகத்தில் வருந்துகிற ஜீவாத்மாக்களைத் தமது தவவலிமையால் மீட்டுக் காப்பாற்றி யருளினார். விசுவாவசு என்பவர் எமலோகம் போய்த் தருமராஜனைத் தரிசித்து இறந்துபோன தமது மருமகளைப் பிழைப்பித்தார். இவை முதலிய அநந்த சரித்திரங்கள் உண்மை நூல்களிலுள்ளன. அந் நூல்களைக் குருமுகமாகக் கேட்டுத் தெரிந்துகொண்டவர்கள் சொர்க்க நரகலோகங்களுண்டு என்பதி லையப்படார்.

அப்படியானால் நரகமெங்குள்ளது? சொர்க்கமெங்குள்ளது? இதில் பெருஞ் சந்தேகமுண்டு. ஏனெனில், சொர்க்கலோகம் வானிலுள்ளது என்பர். அது சொர்ணமயமாதலால் அதிக பிரகாசமுள்ளது. அங்ஙனமாகவும், வியாழம் செவ்வாய் என்னும் கிரகங்களைப்போல ஏன் காணக் கூடாததா யிருக்கின்றது? கண்ணாற் கண்டதாயினும் கருவிகளாலு மறியமுடியாம லிருப்பதேன்? நரகலோகம் தென்திசையிலுள்ளது என்று எல்லாநூல்களுங் கூறுகின்றன. தென்திசையை ஆராய்ந்து பார்த்தும் அகப்படவில்லை. இதனால் இவற்றின் உண்மையில் பெருஞ் சந்தேகமே யெனின், அது கூறுதும். இவையெல்லாம் சூரியனை மையஸ்தானமாகக் கொண்டு கூறப்பட்டதென்று உண்மை நூல்களாற் பெறப்படுகின்றது. சொர்க்கலோகம் அக்கினிலோகம் முதலிய ஒளியுலகங்கள் சூரியனைச் சூழவுள்ளன. அவற்றுள் சொர்க்கலோகமானது சூரியனுக்குச் சற்று வடகீழ்த்திசையி லுள்ளது. சூரியனுக்கும் மேலேயுள்ளது. சூரியனுக்குச் சமீபத்தி லிருக்கிறது. அது இயற்கையிலேயே ஒளியால் விளங்குவது. அவ்விடத்தி லிருளேயில்லை. ஒளிமயமாகிய அவ்வுலகம் சூரியனது பேரொளியோடுகலந்து அதிலழுந்தி மறைந்திருக்கும். சூரியனுக்கு முன் வைக்கப்பட்ட தீபம் சற்றுத்தூரத்தி லிருந்து காண்பவர்களுக்குக் காணமுடியாமல், அச்சூரியன் ஒளியில் மறைந்திருப்பது போலவே, அவ்வுலகமும் சூரியனோடுகலந்து ஒளிமயமாகவே யிருத்தலால் எவ்வித கருவிகளாலுங்காண முடியாது சூரியனுக்கு மேலாகவே யிருத்தலால் அதிகதூரத்தி லிருந்து காண்பது ஒருபோதுங் கூடாததேயாம். அதற்குக் கீழாக அநேக ஒளி யுலகங்க ளிருக்கின்றன. அவைகளும் காணமுடியாதவைகளே; இவையெல்லாஞ் சூரியனைச் சூழ்ந்திருப்பதனால். இவ்வுலகங்கள் எல்லாவற்றுக்கும் மேலாகச் சொர்க்கலோக முள்ளது. இப்படியாக ஒளி மயமான பல தேவலோகங்களையுங் கடந்து அர்ஜுனன், இந்திரன் வசிக்கும் அமராவதியைக் கண்டான் என்று பாரதத்தில் கூறப்பட்டுள்ளது. இதனாலேயே

முற்றத்துறந்த சந்நியாசிகளும், யுத்தத்தில் முதுகு திப்பாமல் பொருது மடிந்த வீரர்களும் சூரியமண்டலத்தைப் பிளந்துகொண்டு சொர்க்கலோகத்தை யடைகின்றார்களென்று உண்மைநூல்களெல்லாங் கூறுகின்றன. அஷ்டதிக்குப்பாலகர் வசிக்கும் உலகங்களில் பல, சூரியனைச் சூழவேயுள்ளன. இதனை "வளங்கெழு மாயாபுரியிற் சிவசன்மனெனு மறையோன் மாய்தறன்னுற், களங்கனிபோன் மேனியான் சாரூபமடைந்து வருகணங்களோடு, முளங்கவரு மரங்களிரெண் மணிச்சாமரை யிரட்ட வொளிருஞ் செம்பொன், விளங்குமணி விமானத்து விண்ணவர் பூமழைதூவ விசும்பிற் போனான்" "என்று கூறியுட னேகுதலு மோருலகுகண், டொன்றுமிவ்வுலகமியாது விகடங்கொளூரவுங், குன்றுசெல்வமுமுள்ளா ரெவர்கள் கூறுகெனலும், நன்றுகேளென மகிழ்ந்து கணநாதர் நவில்வார்" என்று போந்த பிரமாண வசனங்களால் வானத்திலேயே அவ்வுலகங்களுள்ளன வென்பது விளங்கும். இஃதேயன்றிப் பூவுலகத்திலேயே கிழக்கு முதலிய திசைகளி லுள்ளன வென்பதில்லை.

இனி நரகலோகத்தைச் சிறிது கவனிப்போம். நரகலோகமிரண்டு வகை: ஒருவகை பூமியிலுள்ளது. மற்றொன்று வானத்திலுள்ளது. பூமியிலுள்ளதை முதலில கவனிப்போம்: பூமியானது கோழியண்டத்தின் வடிவாய்த் திரண்டுள்ளது; எல்லா அண்டங்களு மிவ்வாறே முட்டை வடிவமாகவே யிருக்கும். அதனாலேயே யவற்றுக்கு அண்டகோளங்களென்று பெயர் கூறப்படுவது. நிற்க, பூமியானது உட்புறத்தில் எழுமடிப்புகளுடன் கூடியிருக்கின்றது. முதல மடிப்பில் பாம்புகள் வசிக்கும; இரண்டாம் மடிப்பில் புழுக்கள் பிறக்கும், தேள் முதலிய ஜந்துக்கள வசிக்கும்; மூன்றாவதில் நீரோடிக்கொண் டிருப்பதால் நீரில் வசிக்கும் ஆமை முதலியன வசிக்கும்; நான்காவதில் அக்கினியே நிறைந்து எரிந்துகொண்டிருக்கும்; இந்த மடிப்புகள் வட்டமாகவே யிருததலால் எங்கு மிப்படி யிருககுமாதலால், பூமியில் மேற்புறத்தில எந்த இடத்தில் நின்று பார்த்தாலும அதன்கீழ் எழுமடிப்புக ளிருந்தேதீரும். இதனையே கீழேழுலகமெனறு நூல்கள் கூறுவது. இவை பூமிக்குக் கீழ் முறையே அதல, விதல, சுதல, ரசாதல, தராதல, மஹாதல, பாதலவுலகங்களெனனப்படும். நடுவிலிருக்கும் ரசாதலமாகிய நெருப்புக்குச் சமீபத்திலுள்ள வுலகங்களில் அக்கினியின் தன்மையால் அதிகதுன்ப முள்ளதா யிருக்கும்; அக்கினியைப் பற்றிப் பேசவேண்டுவதில்லை.

இதனைச் சிறிது விளக்குவாம். சோதிட சாஸ்திரத்தில் எண்களைப் பற்றிப் பேசும்போது அ காரம் ஒன்று என்னும் எண்ணுக்குப் பிரதியாக வுபயோகிக்கப்படும். இ காரம் இரண்டு, உ காரம் மூனறு என்பன வற்றைக் குறிக்கும். இதுவும் சோதிடமே யாதலால் அம்முறைகொண்டு ஆராயுங்கால், அதல என்பதில் அ காரம் ஒன்று; விதல எனபதில் வகாரத்தின் மேலுள்ள இ காரம் இரண்டு; சுதல என்பதில் "சு" எனபதிலுள்ள உ காரம் மூன்று. பூமியின் மேற்புறத்தி லிருந்து அதனுட்பிரிவுகளை நோக்குவோமாயின் அதலவுலகமே முதலிற் காணப்படும். அதல என்று பிரித்து ஒன்று உலகமென்று கொள்க. அதென்னவெனில், பூமியின் கீழுலகமானது ஒருபங்கு துன்பத்தை யுடையது என்பதாகச் சோதிட சாஸ்திரங் கூறுகின்றது. பூமியிலுள்ள துன்பத்தைவிட ஒருபங்கு அதிக துன்ப

முள்ள வுலகமென்பது கொள்க. விதல என்பதில் இ காம் இரண்டு ஆத லால் இரண்டு பங்கு துன்பமதிக மென்பதை விளக்கும். சுதலவென்பது மூன்று பங்கு துன்பமுள்ளது என்பதை விளக்கும். ரசாதலம் அக்கினி மயமாதலால் முற்றுந் துன்பமுள்ளது என்று கொள்ளப்படும். எவ்வா றெனில் ரசம் - துன்பரசம். துன்பரசத்தையே முழுமையுங் கொண் டிருக்கு முலகமென்பது கொள்க. தராதலம் என்பதில் தகர ராகாரங் களிலுள்ள அ ஆ காரங்களில் அ ஒன்று, ஆ இரண்டு ஆக மூன்று. மூன்று பங்கு துன்பமுள்ளது என்பது பொருளாம். அதற் கடுத்த மஹதலத்தில் இரண்டு அ காரங்க ளிருத்தலால் இரண்டு துன்பமென்று கொள்க. அதற் கடுத்த பாதலம் என்பது பதலமென்றிருக்க வேண்டியதைப் பாதல மென்று மருவு வழக்காய் உபயோகிக்கப் படுகின்றது. பதலம் என்று கொண்டு ஒருபங்கு துன்பமுள்ளதென்று கொள்ளப்படும். இவ்வாறு அண்ட நிர்ணயங் கூறிய சோதிடநூல்கள் கூறுகின்றன. பூமிக்கடுத்த கீழ்வட்டத்தில் ஒருபங்கு துன்பமும், இரண்டாம் வட்டத்தில் இரண்டு பங்கு துன்பமும், ரசாதலத்தைச் சூழவிருக்கும் மூன்றும் வட்டத்தில் மூன்று பங்கு துன்பமும் எப்போது முள்ளதென்றும், ரசாதலத்தில் எப் போதும் முழுத்துன்பமே யென்றுங் கொள்ளப்படும். (தொடரும்.)

சிவானந்த ஸார யோகீஸ்வரர்.

---

## ஓர் குற்றம்.

துன்மதி௵ சித்திரை௴ 1௳ யிட்டு வெளிவந்த 6-ம் தொகுதி 10-ம் பகுதி ஆனந்தனில் 366-ம் பக்கம் "கடவுளை நம்பினோர் கைவி டப்படார்" என்று தலைப்பெயரிட்டு மிஸ்டர் S. M. பிள்ளை என்று கையெழுத்திட்டவர் எழுதிய விஷயத்தைக் கண்ணுற்றோம். அதைப் படிக் கும்போதே முன்னமே பாட புத்தகங்களில் ஒன்றில் படித்தஞாபகம் வந் தது. அதனுண்மையைக் கண்டுபிடிக்கும் பொருட்டுப் பாடபுத்தகங்களைத் தேடிப் பார்த்தோம். ம-ா-ா-ஸ்ரீ T. V. செல்லப்ப சாஸ்திரியார் B.A., L.T., அவர்கள் எழுதிய ஆரும்பாட புத்தகத்தில் முதலில் காணப்பட்டது. இதை நமது நண்பர் இன்ன புத்தகததினின்று நேயர்களுக்காக எடுத்து எழுதப்பட்டது என்று குறித்திருந்தால் மிக்க கௌரவமாக விருந்திருக்கும். அவ்வாறில்லாமல் தாமே எழுதியதாக மேற்படி செல்லப்ப சாஸ்திரியார் எழுதிய ஆரும்பாட புத்தகத்திலிருந்து அப்படியே வார்த்தை வார்த்தை யாகப் பார்த்தெழுதிக் கடைசி பததியில் "என் அன்பார்ந்த சகோதர சகோதரிகளே" என்னும் வார்த்தைகளையும் "நீங்கள் திட்டமாகத் தெரி ந்துகொள்வதோடு இதர விஷயங்களிலும் சரிவர நடந்துகொள்ள வேணு மாய் வணககத்துடன் கேட்டுக் கொள்ளுகிறேன்" என்பதையும் கடை சியாக அவர் சொந்த வார்த்தைகளால் எழுதியிருக்கிறார்.

இங்ஙனம் முன்பே பல நேயர்கள் இதர புத்தகங்களிலுள்ள விஷயத் தை எடுத்து எழுதி இன்ன புத்தகத்திலிருந்து எடுத்து எழுதியது என்று குறிக்காததால் பலமாகக் கண்டிக்கப்பட்டு அவமானப் பட்டிருக்கிறார்கள் என்ற விஷயம் நமது நண்பர் எஸ். எம். பிள்ளை அவர்கள் அறியார்போ

லும். ஆகையால் இனிமேலாவது நண்பர்கள் விஷயதானம் செய்யும் போது இவ்வாறு கண்டிக்கத்தக்க விஷயங்களை அனுசரிக்காமல் அவர்கள் புத்தியைச் சரியான வழியில் உபயோகப்படுத்தி "ஆனந்தனுக்கும்" நண்பர்களுக்கும் நன்மை பயக்கத்தக்க விஷயங்களையே எழுதக் கடவுள் நல்லறிவூட்டுமாறு அவனடிகளைத் துதிப்போமாக.

வாணியவைசிய சங்கத்தினர்.
கோயமுத்தூர்.

குறிப்பு:—இத்தகைய இழிவான குற்றம் செய்வோரைப் பன்முறை வெளியிட்டிருந்தும், இன்னமும் இவ்வாறு நடப்பது நம் நாட்டார்க்கே இழிவை யுண்டாக்கத் தக்கதாக விருக்கிறது என்று மிக்க விசனிக்கிறோம். அந்தோ இது எப்படியேனும் பதினாயிரம் பேரில் ஒருவரிருவர்க்காயினும் தெரிந்துவிடு மென்பதை இத்தகையோர் கருதுவதில்லை போலும்.

பத்திரிகாசிரியர்.

---

## பெற்றோர்ப் பேணல்

பெற்றோர்ப் பேணல் என்னும் இச்சொற்றொடர், இரண்டாம் வேற்றுமைத் தொகை நிலைத்தொடராய், "இயல்பின் விகாரமும்," என்னும் நன்னூற் சூத்திர விதிப்படி வருமொழி முதல் வல்லினம் மிகப்பெற்று, 'பெற்றோரைப் பேணல்,' எனவிரிந்து, 'பெற்ற தாய் தந்தையரைப் பாதுகாத்தல்' எனப்பொருள் பயவாநிற்கும்.

இவ்விஷயத்தை முன்னரே பல்லோர் பன்முறை பகர்ந்திருக்கவும், ஈண்டும் மீண்டும் வரையநேர்ந்த காரணத்தைச் சிறிது கழறுவாம்.

ஒருநாள் நாம் சென்னைக்குப் பிரயாணஞ் செய்துகொண் டிருக்கையில், நாம் ஏறியிருந்த வண்டியில் சமீபத்தில் ஒரு ஆடவனும் ஒரு ஸ்திரீயும் வீற்றிருந்தனர். அவர்களைக் கண்டவர் யாவரும் செல்வவந்தர்களான சதிபதிகளெனச் சாற்றுவர். வண்டி பெரம்பூருக் கணித்தாய்ச் சென்றுகொண் டிருக்கையில் அவ்விருவருக்குள் அடியிற் காணும் சம்பாஷணை நடந்தேறியது:—

மாது.—என்னுங்கோ நமது அழுக்குத்துணி மூட்டைகளைக் கிழவன் கொண்டு போனானா?

கணவன்.—ஆம், கொண்டு போனான்.

மாது.—கொண்டுபோனானோ? எங்கேனும் விட்டு விட்டானோ?

கண.—இல்லையில்லை, நான் பார்த்தேன்.

மாது.—"ஆமாங்கோ, அதென்ன அந்தக்கிழவன் வீணதிகார மெல்லாம் பண்ணப் பார்க்கிறான். அன்றைக்கே சொல்லி யிருக்கிறேன், மரியாதை கெட்டுப்போகு மென்று. மறுமுறை, 'சோறுகீறு இங்கே கிடையாது வீட்டைவிட்டு நட" என்று சொல்லிப் போடுகிறேன்" என்றாள்.

அச்சமயம் வண்டி பெரம்பூரில் நின்றதும், சுமார் அறுபது வயதுள்ள கிழவனொருவன் அவர்களண்டை வந்து நின்றான். அப்போது அம்மாது

திருவாய் மலர்ந்து, 'ஏன் அய்யா ! சாமான்களை யெல்லாம் சரியாய் வண்டியிலேற்றினையா?' என்றாள்.

கிழ.—ஆமம்மா; சரியாய் ஏற்றினேன்.

மாது.—சரி; நீ பேஸின் வாராவதியிலிறங்கிச் சாமான்களைப் பத்திரமாய் வீட்டில் கொண்டுபோய்ச் சேர், நாங்கள் பட்டணம்போய் இரண்டு புடவைக ளெடுக்கவேண்டி யிருப்பதால் பார்த்து எடுத்துக்கொண்டு அப்படியே வீட்டிற்கு வந்து விடுகிறோம்.

கிழ.—அப்படியே ஆகட்டும்; வண்டிக்குப் பணம்கொடு.

மாது.—வண்டிவேணுமா! நடந்துபோகக் கூடாதா ?

கிழ.—"சாமான்களைத் தூக்கிக்கொண்டு அவ்வளவு தூரம்போக முடியுமா அம்மா ?" என்றான்.

உடனே கணவன் ஓர் காகித மடிப்பைத்திறந்து அதிலிருந்த பணத்திலிருந்து இரண்டணுகொடுத்து, 'போ, சாமான்கள் பத்திரம்' என்றான்.

கிழ.—இரண்டணுவுக்கு வண்டிவருமா, அரைரூபாய்க்குக் குறைந்துவரவே மாட்டார்கள்.

கண.—அட! வண்டியேன் ? நடந்துபோய்விடு. பணத்தை உன்செலவுக்கு வைத்துக்கொள்ளேன்.

கிழவன் 'ஐயையோ, என்னால் முடியாது! என்று வம்பாட, அம்மணி தன் வெகு கஷ்டத்துடன் முகஞ் சுளித்துக்கொண்டு மறுபடி இரண்டணு கொடுத்துத் 'தொலைஞ்சிபோ.' என்றான். அவனும் மிக்க சந்தோஷத்தோடு போய்விட்டான். பின்னர், அவ்விருவரும் பேசிய பேச்சுக்களால், நாம் இதுகாறும் ஓர் வேலைக்காரனெனக்கருதி யிருந்த அக்கிழவன் அவ்வாடவனது தந்தை யென்றறிந்ததும், நம்மனம் படடபாட்டை நாயகனே அறிவார்.

நண்பர்களே! பெற்ற பிதாவைப் பேயாய்ப் பறக்கவிட்டுக் கூலியாளாக்கி, மனைவிக்கே சர்வாதிகாரமும் கொடுத்து, அவள் கற்பையும் கெடுத்துப் பழிகாரியாக்கிய இப்புத்திரனால் அககிழவ னடைந்த பேற்றை உற்றுச் சிந்திக்கும்படி வேண்டுகிறேன். ஆயினும் பெற்றோரை வாயில் வந்தபடி வைது அடித்து உதைக்கும் புண்ணியவான்களும் எண்ணிறந்தோர் உளர் என்பதும் மறுக்கவொண்ணாததோருண்மை. தற்காலம் உலகெங்கும் உலவிவரும் நாகரீகத்தின் ஒரு பகுதிபோலும் இது. முற்காலத்தில் தகாதவிதமாய், மருமக்களுக்குத் துன்பம் விளைப்பதாய், உயர்நிலைபெற்றிருந்த இப்பெற்றோரைப் பேணல், நாகரீகம் முதிரமுதிர நேர்மாறாகத் தகாதநிலையிற் றாழ்வடைந்து வருகின்றது. ஏற்றத் தாழ்வின்றி நடுநிலைமையி லிருத்துவதே கற்றோர் தங்கடமையாகலின், இத்தகைய விஷயங்களை எத்தனை முறை வரையினும் இழுக்காகா தென்பதை நினைத்தே எழுதத் துணிந்தாம்.

மனிதராகப் பிறந்து பாலாவத்தை யொழித்து பகுத்தறிவு பெற்றுள்ளவரையில் ஒவ்வொருவரும் தாம்தாம் இத்தன்மைய நிலை யெய்தற்

குக் காரணபூதரா யிருந்தோர் யாவர்? அவர்கள் நம்பொருட்டு எத்தகைய இன்பதுன்பங்களைத் துய்த்தனர்? அவர்களுக்கு நாம் செயற்பாலன யாவை, என்பவற்றை ஆராய்ந்தறியக் கடமைப்பட்டவராவர்?

எல்லாவற்றிற்கும் தாய் தந்தையரே யன்றோ ஆதி கர்த்தாக்கள்? நம்மைப் பெற்று வளர்ப்பதற்காக அவர்கள் பட்ட கஷ்ட நஷ்டங்களெத்தனை? நாம் ஒரு வேளை ஒரு பிடி யன்னம் அதிகமாகப் புசித்து விட்டோமாயின், வயிற்றைச்சுமக்க வியலாது படுத்துப் புரண்டு பரிதவிக்கிறோமே! நம்மை மூன்நூறு நாட்கள் வரையில் சுமந்தாளே; அவள் எப்பாடு பட்டிருப்பாள்? நம்மைப் பெறுங்கால் அவளடைந்த வேதனை செப்புந்தரத்ததோ? பிரசவகாலத் துன்பத்தால் மாண்ட மாதாக்கள் எத்தனையோ பேர். ஒரு பிள்ளையைப் பெற்றெடுத்தாளென்றால் ஒரு முறை நமன் வாயிற் சிக்கித் தப்பினளெனக் கூசாது கூறலாம். அத்தகைய காலத்திலும் 'குழந்தைக்கு யாதொரு கெடுதியு முண்டாகா திருக்கவேண்டுமே, தெய்வமே.' எனக் கடவுளைப் பிரார்த்தித்துக் குழந்தை பிறந்ததும் தன் நோயைப் பொருட் படுத்தாது வாரியணைத்து முத்தாடி எவ்வளவு களிக்கிறாள். நல்ல ஊணுண்டா, இரவிலுறக்க முண்டா, மல சலாதிகளை அலெறிய மென்பாளா? நாம் மருந்துண்டதி னிமித்தம் பத்திய மிருந்தாள். பாலாரிஷ்டங்க ளனுகாவண்ணம் கும்பிட்ட தெய்வங்களெத்தனை? அனுஷ்டித்த விரதங்களெத்தனை? திருஷ்டி கழித்ததெத்தனை? மந்திரங்களெத்தனை? தப்பித்தவறி ஒரு வியாதி வந்து விட்டால் அந்தோ! என்ன வேதனை! ஈ யெறும்பு நாடாவாறு சர்வ சாக்கிரதையாய் அண்டையிலுட்கார்ந்து எவ்வளவு துக்கப்பட்டாள். அஃதும் ஒரு நாள் இருநா ளல்லவே, எத்தனை வருஷகாலம். ஒரு போதேனும் வெறுப்புகொண் டிருப்பாளா? 'நான் எப்பாடு பட்டாலும் சரி, என் குழந்தை சுகமாயிருந்தால் போதும்' என்றாள். நாம் சுகமாய் ஆடிப்பாடி விளையாடிக்கொண் டிருந்தலேயே இவ்வளவிற்கும் பிரதி பலனாய்க் கருதினளே யன்றி வேறல்ல. தந்தையும் இவ்விதமே தாய்க்குப் பக்கத் துணையாயிருந்து பஞ்சு படாப் பாடுபட்டுப் பணந்தேடி நமக்கு வேண்டியவற்றை வேளை யறிந் துதவிப் போஷித்து தீயரோடிணங்கித் தீநெறிப்படாா தடக்கி நன்னெறிச் செலுத்திக் கல்வி கற்பித்துப் பல்வகை நன்மை புரிந்தாரே. மக்களால் மாதா பிதாக்களுக்கு எக்காலுந் துன்பமே யென்பதை

> "மதலையைப் பெறுநாள் துன்பம் வளர்த்திடு நாளுந் துன்பம்
> விதலைநோ யடையில் துன்பம் வியன்பருவத்தும் துன்பம்
> கதமுறு காலர் வந்து கைப்பற்றில் கணக்கில் துன்பம்
> இதமுறல் எந்நாள் சேயால் என்றைக்குந் துன்பமானால்"

என்னும் செய்யுள் நன் குணர்த்தும்.

சுருங்கக் கூறுமிடத்து அம்மை யப்பரைப்போல் அன்புடன் நன்மை புரிந்தோ ரொருவருமே யில்லை யென்னலாம். ஒவ்வொரு குடும்பத்திலுமுள்ள தாய் தந்தையர் தம் பிள்ளைகள் பொருட்டுப் படுந் துன்பங்களை நாம் பிரத்தியக்ஷத்திற் காண்கின்றோ மாகலின் அதிகம் கூறுதல் அனாவசியகமாகும்.

ஆகவே, நாம் கண் கூடாகக் கண்ட வரையில் காப்பாற்றி வளர்த்த கடவுளர் தாயுந் தந்தையுமே. மக்கள், இம்மாண் புடையோரை வணங்

கியே வேறு கடவுளை வணங்கவேண்டுமன்றி, கண்ணால் காண்கின்ற தெய்வத்தைக் கஞ்சி தண்ணீர்க் கலேயவிட்டுக் கண்ணுற் காண முடியாத கடவுளைக் கை கூப்பித் தொழுதலால் யாதொரு பயனுமில்லை. இது பற்றியேயன்றே, (கொன்றை வேந்தனில்), 'அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்', என முன்னர்க்கூறி, 'ஆலயந்தொழுவது சாலவு நன்று.' என்பதைப் பின்பு வைத்தார். இன்னும், 'தாயிற் சிறந்தொரு கோயிலு மில்லை' 'தந்தை சொல் மிக்க மந்திர மில்லை' 'ஈன்றாளி னென்ன கடவுளுமில்லை' என்று கூறப்பட் டிருக்கிறது. இன்னும்,

"தாயினிற் சிறந்த தெய்வமில்லை உயர் தந்தை தன்னின்
எயநற் குருவு மில்லை என்னின்மற் றிவர்கள் தாளில்
தூய்மலர் தூவி நாளும் தொழுதிடு மறிஞர் தாமே
ஆய்கதிர் பரப்பும் பொன்னாட் டமரரா யினிது வாழ்வார்.

ஈன்ற தாயினை யீன்றெடுத் திருபுயத் தணைக்கும்
ஆன்ற தந்தையை அகந்தைசெய் தகன்றுபோ யடவி
தோன்றி மாதவம் தொடங்கினே ரிவர்களைத் தொல்லை
மூன்று தேவரும் முனிவுற நிரயமுற் றிழிவார்.

தந்தை தாய் பணித்தல் செய்யும் தவமலால் தவம்வேறில்லை மைந்தருக்கு."

என்றின்னோரன்ன ஆன்றோர் அனுபவ மொழிகளால் புத்திரன் மாதா பிதாக்களையே தெய்வமாகக் கொண்டு வழிபடல் வேண்டு மென்பதும், அவ்வாறின்றி அவர்கள் வருந்த அடவி சென்றாற்றும் தவம் அவமேயென்பதும், தந்தை தாய்ப் பேணும் தவம் அத்தவத்தினும் சிறந்ததென்பதும் விளங்குகின்றது.

இதற்குத் திருட்டாந்தமாய் பூர்வம் நடந்த சரித்திர மொன்றைக் கூறுவாம். (இன்னும் வரும்)

பூ. ஸ்ரீநிவாசன்,
தமிழ்ப்பண்டிதர், இராணிப்பேட்டை.

குறிப்பு:—தந்தையை மூட்டை சுமந்து செல்லும்படிச் செய்த அப்பாம சண்டாளனுடைய பெயர் முதலியவற்றைக் கஷ்டத்தோடேனும் விசாரித்தறிந்து நமது நண்பர் வெளியிடவில்லையே யென்று உண்மையாகவே விசன முறுகிறோம். அப்படி வெளியிட்டிருந்தால், பெற்றோரை யவமதித்து நடத்தும் ஏனைய மூட சிகாமணிகளுக்கு மிக்க எச்சரிக்கையாயிருக்கு மென்பதே நமது கருத்து.

பத்திரிகாசிரியர்.

---

## சிறுவயதும் சிக்ஷையும்.

குழந்தைப் பருவத்தில்தான் அறிவிற்கும் உணர்விற்கும், பலமும் ஆழமும் கூடுவது என்பது சகஜம். ஆதலால் அக்காலத்தில் குழந்தைகட்கு ஊட்டப்படும் அறிவைப்பற்றி எவ்வளவு ஜாக்கிரதை யெடுத்தாலும் தகும். பிற்காலத்தில் வித்தியாப்பியாஸம் வரும்போது சரியாகத் திருத்தமடையும் என்றெண்ணிச் சிறு பிராயத்தில் அசுத்த வாழ்க்கைக்கும், துர்க்குணங்கட்கும், கெட்ட நடத்தைகட்கும் ஆதாரமான வாசனைகளை யளிக்கும் அறிவிலார்களைப் பற்றி எவர்தாம் நிந்தியார்? பெரியவர்கள் எவ்விதம்

செய்கின்றார்களோ அவ்விதம் செய்யக் குழந்தைகளும் பிரியப்படுகின்றன. பெரியோர்கள் பூஜைசெய்வதைக் கண்டு, சிறுவர்கள் கல்லைவைத்துப் பூசித்தும், உத்தியோகஸ்தர்கள் கச்சேரி செய்வதுபோலவும், பள்ளிக் கூடம் வைத்துக் குருசிஷ்யபாவமாகப் பாடஞ்சொல்லல், பாடங்கேட்டல் என்னும் முறைக்கு இணங்க நடித்தும், திருவிழா முதலியன கொண் டாடியும் விளையாடாத ஆண்பிள்ளைகள் அபூர்வம். மணலினாலே சிறுவீடு கட்டி ஓடுகளையும் இலைகளையும் பாத்திரங்களாகக் கொண்டு சமையல் செய்து சாப்பிடுவதாகவும், புருஷன் பெண்ணைக் கல்யாணஞ் செய்து கொள்ளுவதாகவும், பெண்குழந்தைகள் விளையாடுவதைக் காண்கிறோம்; புராணவாயிலாகவும் அறிகிறோம். வைதவ்ய மடைந்து முண்டனஞ் செய் யப்பட்ட பாலியப் பெண்ணைச் சுற்றத்தார் கட்டியழுவதைக் கண்டிருந்த ஒரு சிறுமி தனக்கு நட்பாயுள்ள வேறொரு சிறுபெண் பிரார்த்தனையாய் முண்டனஞ்செய்து வந்ததைக் கண்டதும், தன் நேசராகிய சிறுவர்களை யழைத்து அவர்களோடு கூட அப்பெண்ணைக் கட்டிக்கொண்டு உனக்கு இந்த விதிவந்ததே யென்று அழுததாகப் பெரியோர் சொல்லக் கேட் டிருக்கிறோம். இவ்வாறே, கண்டதைச்செய்யும் கருத்து குழந்தைகளுக்கு அதிகம் இருப்பதால், பெற்றோர்களும் உபாத்தியாயரும குழந்தைகளு டன் சம்பந்தப்பட்ட ஏனையோரும், அவர்கள்முன் மிகு ஜாக்கிரதையோடு நடந்து கொள்ள வேண்டுவது அத்தியாவசியமாகும்.

2½-வயது முதல் 10-வயது வரை பால்யகால மென்பது சில பெரி யோர் கொள்கை. இந்தப் பால்ய காலத்தில் விசுவாசம், பயம், கேண் மை, சொன்னதை யெல்லாம் நம்பிக்கொள்ளுதல் என்னுந் தன்மைகள் மிகுதியும் அமைந் திருக்கின்றன. ஆகையால் அக்காலத்தில், அவர்களி டம் சொல்வதெல்லாம் உண்மையாகவும் பிற்காலத்து உறுதி பயப்பன வாகவுமிருத்தல் வேண்டும். கடவுளுடைய வல்லமை, அடியார்களின் மகிமை, புண்ணியபாவ வியல், சத்தியவாசகம், உயிர்களிடத்து இரங்கு தல் ஆகிய இத்தகைய வற்றைப் போதித்தல் வேண்டும்.

குழந்தைகளிடத்தில் எப்போதும் முகமலர்ச்சியோடு அன்பும் பிரீதி யுங் காட்டல் வேண்டுமே யன்றி, வன்முகங்காட்டலும், வன்சொற் கூற லும் ஆகாவாம். "குழந்தையுந் தெய்வமும் கொண்டாடு மிடத்தில்" என்ற பெரியோர் வார்த்தைக்கிணங்கத் தங்களிடத்தில் அன்பையும் நட்பையும் காட்டுகின்ற பெரியோர்க ளிடத்தில் சிறுவர்களும் எத்தனையோ பிரீதி யோடும் பக்தி விசுவாசத்தோடும் நடந்து கொள்ளுகிறார்கள். அப்பெரி யோர்களுக்கு, வருத்தமும் கோபமும் உண்டாகக்கூடிய வழியில் பிரவே சிக்கின்றார்களில்லை; ஏவிய பணிவிடையை உவப்போடும ஜாக்கிரதை யோடும் செய்து முடிக்கின்றார்கள். எப்படி நடந்தால் நம்மீது மென்மே லும் பிரியப் படுவார்கள் என்பதை சதா எண்ணத்தில்வைத்து ஒழுகுகின் றார்கள், "இன்சொலா லன்றி யிருநீர் வியனுலகம், வன்சொலால் என் றும் மகிழாவாம்" என்பது எத்தகைய அருமைத்திருவாக்கு !

N. S. ஆறுமுகப்பிள்ளை,

அப்பாச்சிக்கவுண்டன்பதி, போத்தனூர்.

குறிப்பு:—சிறுவர்களின் மனம் மாசற்ற வெண்மை நிறம் பொருந்திய ஒரு சுவரைப்போன்றது. மேலும் களங்கமற்ற கண்ணாடிபோல் பிரதிபிம்ப யோக்கியமானது. முன்ஜன்மத்தில் எவ்வளவோ கல்வியும், உலக அனுபவமும் பெற்றிருந்த போதிலும் இறக்கும் தருவாயிலும், பிறக்கும்காலத்திலும் அடைந்த இம்சை மூர்ச்சைகளால் தாயின் உதரத்திலிருந்து வெளிவந்தபோது சகலமும் மறந்துபோ யிருப்பதால் இனி ஒவ்வொரு ஞானமும் பார்ப்பதாலும் கேட்பதாலுமே அடையவேண்டும். இதனால் அவர்கள் கட்புலனுக்கும் செவிப்புலனுக்கும் எட்டிய எவையும் புகைப்படம் பிடித்ததுபோல் அவர்கள் மனதிற் பதிந்துவிடும்.

ஆகையால் அக்காலத்தில் அன்பு, மரியாதை, கடவுள்பக்தி, உண்மை, பொறுமை, அடக்கம், தைரியம் முதலியவற்றில் பிரியத்தையும், பொய், மூர்க்கம், கோபம், சோம்பல், பொறாமை, புறங்கூறல் முதலியவற்றில் வெறுப்பையும் உண்டாக்கத்தக்க பேச்சுகளையும் நடக்கைகளுமே அவர்கள்முன் காட்டப்பட வேண்டும். நமது நாட்டாரில் பெரும்பாலாரிடம் ஒரு கெட்டவழக்க மிருக்கிறது. பெற்றோர்களும் சுற்றத்தாரும் அறியாமையாலும் முன்னே சிந்தியாததாலுமே சந்தோஷத்தோடு அதைச் செய்கிறார்கள். அந்தோ! அதனால் நமது குழந்தைகளுக்கு நாமே பெருந்தீங்கிழைக்கிறோம் என்பதைக் கருதுகிறார்களில்லை. அதென்ன வெனின்,—

குழந்தைகளுக்கு ஆரம்பத்திலேயே துர்ப்பாஷைகளையும் துர்நடக்கைகளையும் ஒரு சந்தோஷச் செயல்போல் கற்பிக்கிறார்கள். "மாமாவைச் சீநாயே என்று சொல்," "அக்காளை உதை" "தூ என்று காறித்துப்பு" 'உதைப்பேன் என்று சொல்" என்று இத்தகைய போதனைகளைச் செய்து குழந்தைகள் அவ்வாறே நடப்பதைக்கண்டு கெக்கலிகொட்டி நகைத்து அவர்களைப் பேஷ் என்று தட்டிக் கொடுக்கிறார்கள்.

அந்தோ! சிறு குழந்தைகள் தாங்கள் அப்படிச்செய்தால் மூத்தவர்கள் சந்தோஷ மடைகிறார்கள் என்று கருதிக்கொண்டு, அவ்வாறே மறவாமல் நடக்கத் தொடங்குகின்றன. பிறகு ஒருமரியாதையான அன்னியமனிதர் வீட்டிற்கு வந்தபோது, குழந்தை தெரியாமல் அவர்கள் விட்டிருக்கும் பாதரட்சையைக் கையில்தூக்கிச் செல்வதைக்கண்டு அவர்கள் அன்போடு "குழந்தாய்! அதை யெடுக்காதே அம்மா, கீழே போட்டுவிடு" என்றால், குழந்தை தன் வழக்கம்போல் "சீ-தூ-நாயே" என்று அப்பாதரட்சையை யவர்கள்மேல் எறிகிறது. அப்போது மூத்தோர் தலை நாணிக்கொள்ள நேர்கிறது. சில முரட்டுப்பெற்றோர் தாங்களே அவ்வாறு முதலில் பழகிவைத்ததைச் சிந்திக்காமல் அப்போது கோபங்கொண்டு குழந்தையை நையப்புடைக்கின்றனர்.

இத்தகைய கொடிய வழக்கத்தை விட்டொழிக்க முயலும்படி ஒருவருக் கொருவர் வற்புறுத்தல் வேண்டும். இப்படிமட்டும் செய்தால் நம் நாட்டுக்குழந்தைகள், இயற்கையிலேயே கடவுள் பக்தி முதலிய நற்குணங்கள் பொருந்தியுள்ளவை யாதலில், சுலபத்தில் நல்ல குணங்களையும் நடக்கைகளையும் கற்றுக் கொள்ளும் என்பது உண்மை.

பத்திரிகாசிரியர்.

---

சந்தா நேயர்களனைவர்களும் கீழ்க்காணும் விஷயங்களைக் கவனித்து வாசித்தறியும்படி வேண்டிக்கோள்கிறோம்:—

அடுத்த ஆனி மாதத்தோடு ஆனந்தனுடைய ஆறுவதாண்டு நிறைவுற்று, ஆடி மாதம் 7-வது ஆண்டு பிறக்கப் போகிறது. ஒவ்வொரு வருடமும் வி.பி. யனுப்புவதாலுண்டாகும் கஷ்ட நஷ்டங்களைப்பற்றி நண்பர்களுக்கறிவித்து முன்பணம் அனுப்பும்படி வேண்டிக் கொண்டிருக்கிறோம்.

இம்முறை வி.பி. களால் நமக்கு நஷ்டமுமதிகமாகும். ஏனெனில், எல்லா வி. பி.களும் ரிஜிஸ்டர் செய்யப்படவேண்டும். அதற்கு 2 அணு, அதன்றி 1921ளூ ஏப்ரல்மீ 18உயிலிருந்து மணியார்டர் கமிஷன் 1 ரூபாய்க்கும் 2 அணு வாகிறது. இவற்றோடு வி. பி.யிலனுப்பப்படும் சஞ்சிகைக்கு அரையணு தபாற்பில்லை ஒட்டவேண்டும். இவற்றால் முன் பண மனுப்புகிறவர்களுக்கு ரூபா. 1—2—0 மட்டுமே செலவு—வி. பி. யில் பெற்றுக்கொள்கிறவர்கள் ரூபா 1—5 செலுத்திப் பெற்றுக்கொள்ள வேண்டும். வி. பி. வாபீசாகிவந்தால் 3 அணு நமக்கு நஷ்டமேற்படும்.

ஆகையால், முதலாவதாக—அடுத்தவருடம் சஞ்சிகையை நிறுத்த விரும்புவோர் உடனே 1921ளூ ஜூன்மீ 15உக்குள் நமக்கு அறிவிக்கும்படி பன்முறையும் வேண்டிக்கொள்கிறோம்.

நாம் பன்முறை வேண்டிக்கொண்டும், ஒவ்வொரு வருடமும் பலர் முன்னடி யறிவிக்காமலே யிருந்துவிட்டு, பிறகு வி.பி. வரும்போது வாபீஸ் செய்து விடுகிறார்கள். அந்தோ! இத்தகைய நடக்கை மிக்க இழிவான நடக்கை யன்றோ. இவ்வாறு இனியும் செய்தால் நாம் முன்பண மனுப்புவோர்க்கு மட்டுமே சஞ்சிகை யனுப்ப நேரிடும்.

இரண்டாவது—வி.பி.யில் பெற்றுக்கொள்வதால் நேரிடும் வீணான நஷ்டத்தைக்கவனித்து மணியார்டர் மூலமாக 1921ளூ ஜூன்மீ 30உக்குள் சந்தாத்தொகையை யனுப்பி விடும்படி வேண்டிக் கொள்கிறோம்.

சஞ்சிகையை நிறுத்தும்படி வரைவோரும், மணியார்டர் அனுப்புவோரும், சந்தா நம்பரைத் தெரிவிக்காவிட்டால் பின்னால் வி.பி வரும். ஆகையால் ஒவ்வொரு சந்தாதாரும் தயவு செய்து இம் மாதம் அல்லது அடுத்தமாதம் வரும் சஞ்சிகையின் மேல்விலாசத்தைப் பார்த்து நம்பரை யவசியம் குறித்து வைத்துக்கோள்ளும்படி பிரார்த்திக்கிறோம்.

நம்பரை மட்டும் சரியாகக் குறித்தனுப்பினால் ஒரு தவறும் நேராது. சிலர் இரண்டு மூன்றுபேர் சந்தாவைச்சேர்த்தனுப்பிவிட்டு

அவற்றில் ஒருவர் இருவர் பெயரை மாத்திரம் எழுதிவிட்டு மற்ற வர்களுடைய நம்பர் தெரியவில்லையென் றெழுதிவிடுகிறார்கள். அத் தகைய தவறுதல்களுக்கு நாம் பொறுப்பாளியல்ல.

சஞ்சிகையில் அபிமானமுடைய நண்பர்கள் இது முதல் அடுத்த ஜூன் மாதம் 30உக்குள் நம்மிடம் வந்து சேரும்படியாக இச்சிறிய சந்தாத் தொகையை மணியார்டர் மூலம் அனுப்பிவிடு வது கஷ்டமான காரியமாகாது.

இவ்வாறு 1921௵ ஜூன்௴ 30உக்குள் நம்மிடம் வந்து சேரும்படி முன்னாடிச் சந்தாத் தொகையை யனுப்பி விடுவோர்களு க்கு "துந்துபி வருடத்திய ஆனந்தபோதினி சுத்த வாக்கிய பஞ் சாங்கம்" இனாமாக அளிக்கப்படும்.

இரௌத்திரி௵ மே௴ சஞ்சிகையில் 424-வது பக்கத்தில் 7-வது பத்தியில் குறித்தபடி 1920௵ ஜூலை௴ 1உக்குள் 6-வது வருடசந்தாவை யனுப்பியவர்களுக் கெல்லாம் துன்மதி வருட பஞ்சாங்கம் அனுப்புவதாகக் கூறியிருந்தோம்; 1920௵ ஜூலை௴ 1உக்குப் பின் சந்தாத்தொகையை அனுப்பியவர்களில் சிலர் தங்களுக்குப் பஞ்சாங்கம் வரவில்லை யென்றெழுதுகிறார்கள். 1920௵ ஜூலை௴ 1உக்குள் சந்தாவை யனுப்பியவர்களுக்கு மட்டுமே பஞ்சாங்கம் இனாமாக அனுப்பப்படும் என்று அறிவித் துக் கொள்கிறோம்.

**இப்போது முதலே சந்தா நம்பரைக்குறித்து வைத்துக்கொள்ள மறவாதிருக்க வேண்டுகிறோம்.**

---

### கிரகப் பிரவேச முகூர்த்த காலத்தில்
### பிரம்மஸ்ரீ, சிவானந்த சாகர யோகீஸ்வர ரவர்களால்
### கூறப்பட்ட வாழ்த்துப்பா.

ஆசிரிய விருத்தம்.

பூமேவு சாலிசக மாயிரத் தெண்ணூறு போந்தநாற் பத்து நாலிற் [ந்த
போற்றுதுன் மதியாண்டு மேடமதி யனுடநாள் புகழ்மிதுன வோரை சார்
தூமேவு நாளிலுல கெங்கும் பரந்தறிவு தூண்டிமன விருள கற்றிச்
சோதிமதி யென்னவுல வாநந்த போதினித் தோமினற் பத்ரி கைக்குத்
தாமேவு மதிபனாய் நற்குணங் கட்குநிறை சாகர மெனப்பொலிந்து[வேள்
தருமநன் னெறியில்வழு வாதொழுகு நங்கண்முனி சாமிமுத லிச்செல்வ
மாமேவு புதியமனை குடிமேவி யானந்த மாக்கடலி னூடுநன் னாள்
மாலயன் பரமன்வடி வேலனவன் வாழ்வுபெற மங்களந் தந்தருள் கவே.

## தபால் கொள்ளைக் காரர்கள்.

(398-ம் பக்கத்தொடர்ச்சி)

நமது நண்பனுன அம்பலவாணன் மேலையூர் தபாலாபீஸில்தான் இலிகிதனு யிருக்கிறுன். இந்த மெயில் களவைப்பற்றித் தன்மேல் சந்தேகம் உண்டானதை யறிந்ததே அவனுக்கு மிக்க வியாகூலம் உண்டாயிற்று. அவன் நன்னெறியினின்று சற்றும் பிறழாதவன். மானத்தின் மேல் திருஷ்டி வைத்தவனுனதால் அவன் மனம் மிக்க வேதனையடைந்தது. ஆயினும் அவன் குற்றமற்றவனுதலால், அவன் உள்ளத்தில் சற்றேனும் களங்கமில்லை. "நாம் நிரபராதியாகையால் கடவுள் எப்படியும் நம்மைப் பாதுகாப்பார்" என்ற நம்பகத்தால் மனுேதைரியமடைந்திருந்தான்.

கெட்டகாலத்திற்குத் தக்கவாறு களவுபோன தினம் மெயில் வரும் சமயம் அம்பலவாணனே ஆபீஸில் இருந்தான. பகல் வேலைசெய்யும் ஆட்களனைவரும் இரவு 10-மணியாகவே அவரவர் மனைகட்குச் சென்றுர்கள். இராவேலையாட்கள் வந்ததே தானும் செல்ல வேண்டியவனே. இராவேலைக்காரன் ஒருவன் மட்டுமே வந்திருக்கிறுன். ஆனுல் அவன் பொறுப்பு வாய்ந்த இலிகிதனல்ல: தபால் பைகள்யாவும் வந்தபின் அவைகள் உடைக்கப்பட்டு உள்ளிருக்கும் கடிதங்களெல்லாம் எடுக்கப்பட்டபின், அவைகளில் இருக்கும் ரிஜிஸ்டர் கடிதங்களைப் பட்டியில் எழுதுவது முதலிய வேலை செய்பவன். அதோடு அவன் இலாகா ஆபீஸின் மற்றொரு பாகத்திலிருக்கிறது. இதனுல் ரெயில் வந்தபோது அம்பலவாணன் ஒருவனே தனியாயிருக்க நேர்ந்தது. சந்தேகங் கொள்வதற்கு இதுவும் ஒரு சந்தர்ப்பமாயிற்று.

ஆரம்பத்தில் இலிகிதர்கள்மேல் சந்தேகம் உண்டாகாமல் இரயிலிலிருந்து தபாலாபீஸுக்குக் கொண்டுவரும் வழியில் எப்படிக் களவுபோயிற்று என்ற பெருஞ்சந்தேகமே யாவர்க்கும் கலவரமாயிருதந்து. "எவனுே கள்ளன் எப்படியோ வண்டியி லிருந்து ஒருபையைக் களவாடிக்கொண்டான். என்றைக்காயினும் ஒரு நாளைக்கு அந்தக் காலிப்பை நகரத்தின் எந்தக் குப்பைமேட்டிலேனும் கிடந்தகப்படும்" என்று கூறிக்கொண்டார்கள்.

ஆனந்தவிங் தபால் களவுகளைக் கண்டுபிடிக்கப் புறப்பட் டிருக்கிறுன் என்பது யாவர்க்கும் தெரியு மாதலால், எந்த விடிைடியிலோ கள்ளரைப் பிடித்துக்கொண்டு வந்துவிடுவானென்று ஆவலோடு காத்துக் கொண் டிருந்தார்கள்.

நாள் செல்லச்செல்ல ஆனந்தவிங் சங்கதி யொன்றுமே வெளிவருவதாய்க் காணேம். இதனுல் ஜனங்களுக்கு உற்சாகம் குறைந்துவிட்டது.

இவ்வாறிருக்க, ஒரு விபத்து யாவர்க்கும் மனத்துயரை யளித்தது. அதாவது, முதல் விசாரணையில் நமது அம்பலவாணன் மேலேயே சந்தேகம் நிலைத்தது. சாமிநாதன் அவனுடைய ஜென்மவிரோதி. அவன் வாக்கு மூலம் கேட்பவர்க்கு மிக்க உண்மையானதாய், களங்கமற்றதாய்த் தோன்

றியது. அப்படி யவன் பொய் கூறியதா யிருந்தால் மிக்க சாமர்த்தியத்தோடும், முன் யோசனையோடும், முன்னுடிச்செய்த ஏற்பாடுகளோடும் கூறியதா யிருக்கவேண்டும். இதன் உண்மையும், இதன் விவரமும், காரணங்களும் பின்னுல் போகப்போக விளங்கும்.

நமது அம்பலவாணன் மிக்க யோக்கிய னென்று யாவரும் நம்பி அவனிடம் விசுவாசமும் மரியாதையும் வைத்திருந்த படியால், அவன்மேல் இத்தகைய சந்தேகம் உண்டானதற்காக யாவர்க்கும் மிக்க மனவருத்த முண்டாயிற்று.

சாமிநாதன் திரண்ட செல்வ முடையவனுயிருக்க, சொல்ப வருமானத்திற்கு அந்த மெயில் ஏஜென்ட்வேலையில் சுயாதீனத்தை யிழந்து ஒருவரிடம் வேலையேன் செய்யவேண்டும் என்பது யாவர்க்கும் மிக்க சந்தேகமே.

அவன் தந்தை யிறப்பதற்கு முன் அவன் பல துர்ச்செய்கைகளைச் செய்து கொண்டு குடும்பததிறகே அகௌரவத்தை யுண்டாக்கிக் கொண்டிருந்தான். அதனுல் அவண தந்தை யவனை வெறுத்து நிராகரித்து விட்டார். அப்போதுதான் அவன் இந்த மெயில் ஏஜென்ட் தொழிலில் பிரவேசித்தான். இப்போது தந்தை இறந்துபோய் எல்லாச்சொத்தும் அவன் வசததில் வந்து விட்டது. அவன தந்தை யாராலோ கொலைசெய்யப்பட்டார். அக்குற்றம் இன்னும் கண்டுபிடிக்கப் படாமலே யிருக்கிறது. எப்படியோ முழு ஆஸ்தியும இவன்கையில் சிக்கிக்கொண்டது. அப்படியிருக்க, இவன் இனனும் இந்த சொல்ப வருமானமுள்ள வேலையில் ஏன் இருக்கவேண்டு மென்பதே ஒருவர்க்கும் விளங்கவில்லை. கதை போகப்போக அக்காரணங்கள் யாவும பூரணமாய் விளங்கிவிடும்.

விசாரணையில் அம்பலவாணன்மேல் சந்தேகம் ஸ்தாபிக்கப்பட்டதே, சாமிநாதன் முகத்தில் ஒருவிதப் பிரகாசம் உண்டாயிற்று. அதோடு அவன் மிகச் சாமார்த்தியமாய் ருசுப்படுத்திய சாக்ஷியங்களால் அவன்மேல் சற்றும் சந்தேகிககக் காரணமில்லை யென்று நியாயாதிபதி தீர்மானித்துவிட்டார். அவன் அம்பலவாணனை நோககி "அடே பாபர்பயலே எனக்குக் குறுக்கே வந்துகூட நீ தப்புவாயா? உனக்கு நல்ல சூடுபோட்டு வைக்கிறேன்?" என்று தனக்குததானே கூறிக்கொண்டான்.

அம்பலவாணன் தாய் நல்ல உயர்ந்த பிரபு வமிசத்தில் பிறந்தவள்; பெருந்தன்மை முழுதும் வாய்ந்தவள். இப்போது வயோதிக மடைந்திருப்பினும் இளமையில் மிக்க ரூபலாவண்ணியமுடையவளா யிருந்திருக்கவேண்டுமெனறு அவள் முகவிலாசததால் நன்கு புலப்பட்டது. அமபலவாணன் தந்தையும் அப்படியே யுயர்குலத்தில் உதிததது, நெடுங்காலம் கப்பல் சைனியத்தில ஒரு உத்தியோகஸதராயிருநது வந்தார். அவர் இறந்தபின் அம்மூதாட்டிக்குத் தன்புத்திரனே எலலாப் போகபாக்கியமுமா யிருந்தான. அம்மாது அவன பரிசுததமான நெறியில் வளரவேணடு மென பதில் தன் கவனம் முழுமையும் செலுத்திவந்தாள். பிற்காலத்தில் அவன் மிக்க யோக்கியன், பெருந்தன்மை, கருணை, மரியாதை, தெய்வபக்தி

யாவும் நிறைந்தவன் என்று ஊரார் அவனைப் புகழ்ந்து, யாவரும் விசுவாசத்தோடும், மரியாதை யோடும் நடத்துவதைக்கண்டு அவ்வம்மையார் பேரானந்தமடைந்தார்.

"ஈன்ற பொழுதிற் பெரிதுவக்குந் தன்மகனைச்
சான்றோ னெனக்கேட்ட தாய்" என்று பொய்யா மொழியார் புகன்றன ரன்றோ.

அத்தகைய தன் புத்திரன்மேல் இத்தகைய அபாண்டமான குற்றச் சாட்டு உண்டானதைக் கேட்டு, அவள் தன் புத்திரனை மார்போடணைத் துக்கொண்டு முத்தமளித்து,

"குழந்தாய்! நீ இக்குற்றத்தைச் செய்யவில்லையென்று நான் சத்தியம் செய்வேன். கடவுள் உனக்கு ஒரு கெடுதியும் நேரிடவொட்டார். என்று எனக்குப் பூரண நம்பிக்கையிருக்கிறது; நீ தைரியத்தைவிடாதே" என்றாள்.

மேற்கூறியபடி விசாரணை நடந்தாலும் அம்பலவாணன்மேல் சந்தேக முண்டாயினும், குற்றவாளி யின்னானென்று அகப்படவில்லை. அப்படியிருந்தும் அம்பலவாணன் கடைவீதி முதலிய விடங்களுக்குச் செல்லும்போது ஜனங்கள் தன்னைப் பார்க்கும் பார்வையாலும் முன்னிருந்த மரியாதையும் விசுவாசமும் இப்போது காட்டாதபடியாலும் "இவர்கள் நம்மைக் குற்றவாளியென்றே நம்புகிறார்கள்" என்று மிக்க மனவருத்தமடைந்தான்.

(தொடரும்)

ஆறணி-குப்புசாமி முதலியார்.

---

## பொது சமாசாரங்கள்

விஷயம்:—சேலம் நகரபரிபாலனசபை.—குறித்த விஷயத்தைச் செவ்வாய்ப்பேட்டை வாசிகள் நேராக நகரபரிபாலன சபையாருக்கு அறிவித்தால், அதற்குத்தக்க பரிகாரம் செய்ய அவர்கள் கடமைப் பட்டவர்க ளானதால், அவசியம் செய்வார்கள் என்றே நம்புகிறோம்.

ஓர் வேண்டுகோள்.

சோதிடம்.—பஞ்சாங்கங்களில் கௌரி பஞ்சாங்கம் என்று ஒருபாகம் பிரசுரிக்கப்பட் டிருப்பது யாவரும் அறிந்ததே. இதில் ஒவ்வொரு தினத்தையும், ஒரு முகூர்த்ததிற்கு மூன்றே-முக்கால் நாழிகை, அதாவது ஒன்றரை மணிகாலம் வீதம், பகல் எட்டு இரவு எட்டு முகூர்த்தங்களாகப் பிரித்து, ஒவ்வொரு முகூர்த்தத்திற்கும் பலன் கூறப்பட் டிருக்கிறது. இது ஒரு பஞ்சாங்கத்திற்கு ஒரு பஞ்சாங்கம் வித்தியாசப் படுகிறது. ஒரு பஞ்சாங்கத்தில் ஞாயிறு பகல் $10\frac{1}{2}$ மணி முதல் 12 மணி வரையில் இலாபம் என்று கூறியிருந்தால், மற்றொரு பஞ்சாங்கத்தில் அதேகாலத்திற்குச் சோரம் என்றும், இன்னொன்றில் ரோகம் என்றும் இவ்வாறு பலவிதமாகவிருக்கிறது. இப்படியாயின் எதை உண்மையென நம்புவது? இப்படி இருப்பதற்குக் காரணமென்ன? சோதிடமறிந்த அறிஞர் இதை விளக்கிவைக்குமாறு வேண்டிக் கொள்கிறோம்.

# "ஆனந்த போதினி" பஞ்சாங்கம்

## துன்மதி௵ ஆனி௴—சாலிவாகனம் 1844—கலி 5023
## பசலி 1330-31—கோல்லம் 1096-97—ஹிஜரி 1339-40
## இங்கிலீஷ் 1921௵ ஜூன்௴—ஜூலை௴.

| ஆனி௴ | ஜூன்௴ | வாரம். | திதி. | நக்ஷத்திரம். | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 14 | செ | நவ-17-13 | அஸ்-40-38 | சித்-60 | கரிநாள் |
| 2 | 15 | புத | தச15-35 | இத்-41-22 | சித்-60 | உபநயனம், வித்தியாரம் |
| 3 | 16 | வியா | ஏகா15-10 | சுவா-43-10 | அ43-10சி | முடிசூட்ட, விதைவிதை |
| 4 | 17 | வெ | துவ16-15 | விசா-46-5 | சித்-60 | பிரதோஷம் [க்க |
| 5 | 18 | சனி | திர17-35 | அனு-49-53 | சித்-60 | அகமெடுக்க |
| 6 | 19 | ஞா | சது20-8 | கேட்-54-33 | ம54-33அ | கரிநாள் |
| 7 | 20 | திங் | ○23-37 | மூல-60-0 | சித்-60 | நாமகரணம், விவாகம் |
| 8 | 21 | செ | பிர27-47 | மூல-0-5 | சித்-60 | கடகாயனம் |
| | | | | பூரா-60-0 | | |
| 9 | 22 | புத | துதி32-57 | பூரா-6-22 | அமி60 | சீமந்தம் குளம் வெட்ட |
| 10 | 23 | வியா | திர38-33 | உத்-13-20 | சித்-60 | கர்ப்பாதானம் |
| 11 | 24 | வெ | சது44-35 | திரு-20-40 | ம20-40சி | மரணயோகம் |
| 12 | 25 | சனி | பஞ்50-33 | அவி-27-58 | சி27-58அ | கோடியுடுக்க |
| 13 | 26 | ஞா | சஷ்56-0 | சத-35-20 | சித்-60 | நிஷேகம், பூமுடிக்க |
| 14 | 27 | திங் | சப்60-0 | பூர-41-45 | சித்-60 | மந்திரம் ஜெபிக்க |
| 15 | 28 | செ | சப்0-32 | உத்-46-52 | அ46-52சி | ஆயுதம் பயிற்ற |
| 16 | 29 | புத | அஷ்3-40 | ரேவ-50-20 | மர-60 | கலிக்காமர் நட்சத்ராம் |
| 17 | 30 | வியா | நவ4-48 | அசு-51-50 | அ51-50சி | விவாகம் செய்ய |
| 18 | 1 | வெ | தச 4-5 | பர- 51-15 | சித்-60 | மாடுவாங்க |
| | | | ஏகா60-0 | | | |
| 19 | 2 | சனி | ஏகா0-20 | கிரு-48-40 | அ48-40சி | கிருத்திகை |
| | | | து56-20 | | | |
| 20 | 3 | ஞா | திர49-45 | ரோ-44-30 | சித்-60 | பிரதோஷம் |
| 21 | 4 | திங் | சது42-0 | மிரு-38-30 | சித்-60 | வாகனம் வாங்க |
| 22 | 5 | செ | ●33-12 | திரு-31-42 | மர3-42சி | அமாவாசை விரதம் |
| 23 | 6 | புத | பிர23-50 | புன-24-30 | சித்-60 | திதி துவயம் |
| 24 | 7 | வியா | து14-26 | பூச-17-13 | சித்-60 | ருதுசாந்தி செய்ய |
| 25 | 8 | வெ | திர5-30 | ஆயி-10-23 | மர-60 | மாணிக்கவாசகர் திரு |
| | | | சது57-33 | | | |
| 26 | 9 | சனி | பஞ்50-30 | மக-4-20 | அ4-20சித் | |
| | | | | பூர-59-40 | | |
| 27 | 10 | ஞா | சஷ்45-3 | உத்-56-27 | அ56-27சி | |
| 28 | 11 | திங் | சப்41-20 | அஸ்-54-55 | சி54-55பி | |
| 29 | 12 | செ | அஷ்39 0 | சித்-55-0 | சித்-60 | |
| 30 | 13 | புத | நவ38-25 | சுவா-56-40 | சித்-60 | |
| 31 | •14 | வியா | தச39-22 | விசா-59-15 | சித்-60 | |
| 32 | 15 | வெ | ஏகா41-35 | அனு-60-0 | சித்-60 | |

1921௵ ஜூலை௴

| | | | |
|---|---|---|---|
| | கேது சுக் | | சூ பு செ |
| | 17 ரிஷசுக்<br>30 கன்-ர<br>30 மீன-கே | | குரு சனி |
| | | ராகு | |

Printed & Published by N. Munisawmi Mudaliar at the
"Ananda Bodhini" Power Press, 15, Venkatesa Maistry Street, Madras.